# சங்க காலத் தமிழ் நாடு



வே. கந்தசுவாமி முதலியார், பி. ஏ., எல். டி.,
எழுதியது



'ஒற்றுமை' ஆபீஸ்
தியாகராயநகர், சென்னை .

பதிவுசெய்யப்பட்டது] 1945 [விலை அணா 10

# பொருளடக்கம்


| எண் | பொருள் | | பக்கம் |
|---|---|---|---|
| 1. | மருதம் | ... | 1 |
| 2. | நெய்தல் | ... | 17 |
| 3. | முல்லை | ... | 30 |
| 4. | குறிஞ்சி | ... | 43 |
| | குறமகள் குன்றம் | .... | 57 |
| | முடிவு | ... | 62 |

# சங்ககாலத் தமிழ்நாடு

## 1. மருதம்

கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் வகை கிடைத்த
குளிர் தருவே தரு நிழலே நிழல் கனிந்த கனியே
ஓடையிலே ஊறுகின்ற தீஞ்சுவைத் தண்ணீரே
உகந்த தண்ணீர் இடை மலர்ந்த சுகந்த மண மலரே
மேடையிலே வீசுகின்ற மெல்லிய பூங்காற்றே
மென் காற்றில் விளை சுகமே சுகத்தில் உறும பயனே
ஆடையிலே எனை மணந்த மணவாளா பொதுவில்
ஆடுகின்ற அரசே என் அலங்கல் அணிந்தருளே.

தரு-மரம், உகந்த - இன்பமான, ஆசை - சித்திரைத் திங்கள், பொது - சபை, அலங்கல் - பூமாலை.

மெல்லிய பூங்காற்று வீச மர நிழலில அமர்ந்து இன்பமெய்திக் கோடை காலத்தைக் கழித்தோம். தென்றல் காற்று மாறி வடகாற்று வீச, மேகத்திரள்கள் கரிய யானைக் கூட்டம்போல், இடி இடித்து மின்னல் மின்னித் தெற்கு நோக்கி விரைந்துவந்து, நீல மலை உச்சிகளை வலமுற்றுத் திருமாலின் கையில் மாபலி வார்த்த நீர்போல் பெய்ய, எங்கும் நீர்த்திரள்கள் ஓடி உலாவுகின்றன.

வையை (வைகை) ஆறு நீர்ப் பெருக்குற்று நுரைத்து முழவோசை பெருக்கித் தன் இரு கரைகளையும் தாக்கி இடித்து விரைந்து செல்லுகின்றது. அதன் அதிர்ச்சியால் வாழைமரங்கள் முறிந்து வீழ்கின்றன. தெங்கின் இளநீர்க் குலைகள் உதிர்கின்றன.

ஆசினிப் பலாவின முற்றிய சுளைகள் நிலம்படிகின் றன. சுர புன்னையின் மலர்கள் உதிர்கின்றன. மிளகுக் கொடிகளின் கரிய கொத்துக்கள் சாய்ந்து நிற்கின்றன. அந்நீர்ப் பெருக்கின் மத்தள ஒலியால் வெருண்டு, கோழியும் மயிலும் ஓடி ஒளிக்கின்றன. வாகைப் பூப்போன்ற வளைந்த கோரைப் பல்லை யுடைய ஆண் பன்றியும் பெண்பன்றியும், வளைந்த அடியினையுடைய கருமயிர்க் கரடியொடு தம் தம் முழைஞ்சுகளில் சேர் கின்றன. வெள்ளிய கொம்புடைய களிறும் பிடியும் அந்நீரிடைத் திளைத்து இன்புறுகின்றன. வையை ஆறு, அகில் சந்தன முதலிய மரங்களை வேருடன் பறித்து, பொன்னையும் மணியையும் இருகரைகளிலும் குவித்துக் குளங்கள் தோறும் புகுகின்றது.

குன்றும் குளிரக் காலந்தவறாமல் புதுப் பெயல் பொழிய, செங்கால் புறாச் சேவல்கள் தங்கள் பெடைகளொடு இன்புற்று இரைதேடி யுண்ணுது, 'இமும், இமும்' என்னும் ஒலி எழுப்பிக் கழுத்தை நிமிர்த்தி வளைத்துத் தம் பெட்டைகளைச் சுற்றிச் சுற்றி உல்லாச ஆட்டம் ஆடாது, இரவு பகல் என்று அறி யாது, மயக்கமுற்றுப் பரணில் அமர்ந்து, செயலற்றுக் கடுத்த கால் ஆறும்படி மாறி மாறி இருக்கின்றன. 'கொக்கரகோ, கொக்கரகோ' என்று வைகறையை இயம்பும் சேவல் கோழிகள், நிலத்தைத் தம் கால்க ளால் சீத்துச் சீத்து இன்குரல் எழுப்பிப், பெடை களை அழைத்து உண்ணுமல் பரணில் அமர்ந்து ஒன்றையொன்று குத்திக் குத்திப் பொழுது போக்கி யும், தங்கள் சிறகுகளை மூக்கால் கோதியும், தலை அசைத்துத் தூங்கித் தூங்கி வீழ்ந்தும் செயலற்று இருக்கின்றன. பசுக்கள் தங்கள் கன்றுகளை 'மா, மா

என்று அன்புடன் கூவி அழைத்துப் பாலூட்டாது வெறுத்துக், கன்றுகளைக் காலால் கடுமையாக வீசித் தள்ளுகின்றன. ஓரி (கழுத்து மயிர்) அசைய விரைந்து ஓடும் புரவிகள் புல் உண்ணாது தெவிட்டிப் புலம்பி நிற்கின்றன. ஓர் உடை உடுத்துக் கூழ் உண்ணும் இடையர்கள், கன்றுகளுடன் பசுத்திரள்களைக் காட்டிலே மடக்கிச் சுள்ளிகளைக் குவித்து நெருப் பெழுப்பி, தீக்கடை கோலால் தொளைகுடைந்து குழலை வாசிக்காமல், வேறு புலத்தை நாடிச் செல்லுகின்ற னர். குளிர் மிகையால் உடல் நடுங்கிப் பல் நடுங்கி வளைந்த ஆயக்கோலைத் தோளிலிட்டுப் புல்லுள்ள வேறு புலம் நாடிச் செல்லுகின்றனர். குளிரால் உண் டான நடுக்கம் தீரத் தீ எழுப்பிக் குளிர் காய்கின்றனர். கூட்டில் வாழும் பறவைகள் குளிர் மிகையால் உடல் விறைத்துத் தங்கள் கூடுகளினின்று மடிந்து வீழ்கின் றன. ஆண் குரங்கும் பெண் குரங்கும் மரக்கிளைகளில் தாவித் தாவி ஓடி விளையாடாமலும், மரங்களின் விழுதுகளைப் பற்றி ஊசலாடி இன்புறாமலும், உடல் நடுக்குற்று, பல் நடுங்கி, கை கால்களை ஒடுக்கி மடக் கிச் செறிந்த இலைகளின் இடையே பதுங்குகின்றன.

எங்கும் நீர்த்திரள். எங்கும் பொறுக்க ஒண்ணாக் குளிர். குன்றும் குளிர்ந்தது. நாமும் குளிர் மிகையால் வருந்துகின்றோம். கொடு கோல் கோவலர் போல் வேறு இடம் செல்வோம். அங்காடித் தெருவில், இருண்ட வானத்தில் விண்மீன்கள் ஒன்றின்பின் ஒன் றாய் விரைந்து தோன்றி ஒளிப்பது போல், விளக் கேற்றி மாலையைக் கொண்டாடுகிறார்கள். அவ் வழகியத் தோற்றத்தைக் கண்குளிரக் கண்டு இன்ப மெய்தி இரவைக் கழிப்போம்.

முதல் சாமமும் கழிந்தது. சங்கோசையும் மறைந்து எங்கும் அமைதியா யிருக்கிறது. பண்டம் விற்கும் மகளிர் சட்டங் கோர்த்த கதவுகளால் தங்கள் கடைகளை அடைத்துத் துயில் கொள்ளுகின்றனர். இருல் போன்ற வரிகளையுடைய பருப்பும் சர்க்கரையும் உள்ளே வைத்துச் செய்த மெல்லிய கொழுக்கட்டைகளைத் தட்டில் வைத்து விற்ற பெண்டிர்களும் தூங்குகின்றனர். கடல் போல் பேரொலியுற்று விளங்கிய அங்காடித் தெரு ஒலி அடங்கி நிற்கின்றது. ஊர் காப்பாளர் தெருத் தெருவாய்த் திரிந்து ஒளிந்து நின்று, யானைமேல் பாயும் புலிகளைப்போல், கள்வர்மேல் பாய்ந்து பிடிப்பர். பொழுதும் விடியும் வேளை நெருங்குகிறது. நாமும் துயிலுணர்ந்து எழுந்தோம். காலையில் அந்தணர் வேதம் பாடுகின்றனர். யாழ் வாசிப்போர் மருதப் பண்ணை வாசிக்கின்றனர். பரிக் கோலர் (யானைப் பாகர்) யானையைக் குத்திக் கவளம் தின்னச் செய்கின்றனர். தறிகளில் கட்டி நிற்கும் குதிரைகள் புல்லை மென்று தின்கின்றன. நாழிகை இசைப்போர் பொழுது விடிந்த தென்று சங்கூதிச் சொல்லுகின்றனர். கூட்டில் அடைபட்டிருக்கும் புலியும் வயமானும் (சிங்கமும்) காலை தோன்ற உறுமுகின்றன.

கடைகளை அடைத்துத் துயில் கொண்டவர், கண் விழித்துக் கதவைத் திறந்து கடைகளைச் சாணங் கொண்டு மெழுகிக் கோலமிட்டு அழகுபடுத்து கின்றனர். இரவெல்லாம் அமைதியாயிருந்த நான்கு தெருக்களிலும் மக்கள் பெருகப் பெருகப் பேரொலியும் தோன்றுகிறது. கூட்டங் கூட்டமாய், வரிசை வரிசையாய், அமர்ந்தும் நின்றும் தாங்கள் கொணர்ந்த

பொருள்களை விலைகூறி விற்கின்றனர் வணிகர். இந்த நான்கு தெருக்களையும் சுற்றிப் பார்த்துப் பாண்டிய நாட்டின் பல வளங்களின் சிறப்பை அறிவோம். ஒரு சார் சங்கை அறுத்து வளையாகக் கடைவாரும், ஒரு சார் அழகிய நீலமணி, மாணிக்கமணி, பவழமணி முத்துமணி இவைகளுக்குத் தொளை குடைந்து மாலையாகப் புனைவாரும், ஒருசார் குற்றமற்ற பொன்னால் செய்த பல அணிகலங்கள் விற்பாரும், அவருடன் பொன் உரை காண்பவரும், ஒருசார் செப்பு, வெண்கலக் கலங்களை விற்பாரும், ஒருசார் கடலின் அறலை ஒத்த சிறியவும் நெடியவுமாய் மடிப்புற்ற புடைவைகளை விற்பாரும், ஒருசார் சாந்தையும் தேர்ந்தெடுத்த பூக்களையும் தட்டங்களில் அழகுபெறப் பரப்பி விலை கூறுவாரும், ஒருசார் வெற்றிலையும் பாக்கும் சங்கு சுட்ட சுண்ணமும் விற்பாரும், ஒரு சார் பலர் கூடி இடித்த பொடி விற்பாரும் வரிசை வரிசையாக இருக்கின்றனர்.

இன்னொரு தெருவில் தேனும், பலாச்சுளையும், மாம்பழமும், பல வடிவினையுடைய பாகற்காயும் கத்தரிக்காயும், வாழைக்காயும், இலைக் கறிகளும் (கீரை), வாழைப்பழமும், முந்திரிப்பழமும், பல வகைக்கிழங்குகளும் விற்பார்கூடி விலை கூறுகின்றனர்.

பின்பனிக் காலமும் நீங்கி இளவேனிற்காலமும் தோன்றி நிற்கிறது. சித்திரைத்திங்களும் பிறக்க மக்கள் எங்கும் விழாக்கொள்ளுகின்றனர். அவ்விழாக்களோடு கலந்து கொண்டு இன்புறுவோம். நறுமணந்தோய்ந்த மெல்லிய பூங்காற்று வீசுகின்றது.

சிறு தெய்வங்களைத் தொழுவதும் அச்சிறு தெய்வங்களுக்குப் பலியிட்டு வணங்குவதும் நம் மக்களி

டையே தோன்று தொட்டு உலவிவருகிறது. வெறிக் களத்தில் வேலன் வெறியாடுவதையும் சிறிது தங்கிப் பார்ப்போம். கோழிக்கொடியாலும், பூங்கொடி யாலும், தெங்கின் இளந்தளிர்களாலும், காடும் பொழிலும் ஆறு கடல் சேரும் இடமும், ஆற்றங் கரைகளும், குளக்கரைகளும், நாற் சந்தியும், முச்சந்தி யும், ஐஞ்சந்தியும், கடம்பமரங்களும் ஊர்க்கு நடுவே யிருக்கும் மரங்கள் செறிந்த மக்கள் கூடும் இடங் களும், அம்பலங்களும் அழகு பெற்று விளங்கு கின்றன.

சிறு தெய்வம் கோவில் கொண்டிருக்கும் மரத் தடியில் வேலன் நிற்கிறான். அம்மரத்தை நெய்பூசி மாலை அணிந்து அழகு படுத்தியுள்ளார். கோழிக் கொடியும் காற்றில் ஊசலாடுகிறது. பறையும், வயிரும் இசைக்க, புகை எழுப்பிச் சுடர் கொளுத்தி விழாத் தொடங்குகிறது. அச்சிறு தெய்வத்தின் பலி அரிசித் தட்டங்களில் குவிந்திருக்கின்றன. சிறு பசு மஞ்சள் கலந்த அரிசியையும், மலர்களையும் அச்சிறு தெய்வத்தின் முன் தூவி ஆட்டை அறுக்கின்றனர். ஆடும் குருதியில் தோய்ந்து கிடக்கிறது. குறமகளிர் கையில் செந்நூல் கட்டி இறைவனை வணங்கி இன்னியங் கறங்கக் குரவைக் கூத்தாடுகின்றனர். எங்கும் பேரொலி பெருகி நிற்கிறது. பறையும், முழவும், கொம்பும் இசைக்கத் தெய்வமேறப்பட்டு வெறிகொண்டு வேலன் ஆடுகின்றான். கூட்டத்தி லுள்ள மகளிர் குறி கேட்க, இன்ன இன்ன தெய்வங் களால் அவர்க்கு இன்ன இன்ன குறைகள் நேர்ந்த தெனக் கூறி, இன்ன இன்ன பலி கொடுத்து வணங்க வேண்டுமென்று சொல்லுகிறான்.

சிவன் கோயில் விழாக்கொள்ள மைந்தரும் மகளிரும் திரண்டு கூடுகின்றனர். பரந்த வீதிகளெல்லாம் தண்ணீர் தெளித்துக் கோலமிட்டு, இருபக்கங்களிலும் பூந்தோரணங்களால் அழகு படுத்தி விளங்குகின்றன. மாட மாளிகைகளில் பெருங்கொடிகளும் சிறுகொடிகளும் வானவில் போல் பலநிறத்தனவாய் அழகுற்றுக் காற்றில் ஊசலாடுகின்றன. இத்தெருக்களில், போர்க்களத்தில் இருபெரு வீரர் கூட்டங்கள் பொருது நிற்பது போல், மக்கள் செறிந்து பேரொலி பெருக்கி ஒருவரை ஒருவர் இடித்து இங்கும் அங்கும் திரிகின்றனர். யாழ் இசைக்க, சங்கு நரல, முரசு இயம்ப, முழவு இமிழ, வயிர் ஆர்ப்ப ஆடல் மகளிரும் பாடல் மகளிரும் ஆடியும் பாடியும் தெருக்களின் வழியாகச் செல்ல, அவர் பின்னும் முன்னும் மறைநூலோர்கள் வேதம் பாட, இறைவன் ஊர் வலம் வருகிறான். மாட மாளிகைகளிலுள்ள பெண்கள் கொடித்திரைகளினின்று இக்காட்சியைக் காண்பது, மேகங்களினிடையே முழுமதி தோன்றி மறைவது போல் தோன்றுகிறது. எங்கும் நறுமணம் தோய்ந்து நிற்கிறது. கூட்டம் கலைய, பூக்கள் விற்போரும் பல உருவத் தின் பண்டங்கள் விற்போரும் மாடமாளிகைகளின் நிழலில் அமர்ந்தும், திரிந்தும், அம்மாடமாளிகைகளினுள் சென்றும் விற்கின்றனர். பேரொலி பரவி நின்ற தெருக்களெல்லாம் அமைதியாயிருக்கின்றன.

அதோ தொலைவில் சங்கூதி ஒருவன் மக்களை எச்சரித்து ஓடிவருகிறான். அவன் பின்னே மதங்கொண்ட யானை பரிக்கோலனை மிதித்துக் கொன்று பாகனைக் கீழே வீழ்த்திக் கால் தறியுடன் வெருண்டு

வருவதைப்பார். அதன் பின்னும் ஒருவன் சங்கூதி மக்களை எச்சரித்துத் தொடர்கிறான். மக்கள் அஞ்சி நடுங்கி வெருண்டு ஓடுகின்றனர். மதம் அடங்க யானையும் பிடிபடும். தொழுவத்திலும் அதை அடைப்பார்கள்.

மருத நாடு பொதுமகளிர் செறிந்த நாடல்லவா? மருத நில மக்களும் அப்பொதுமகளிரிடம் வேட்கை யுற்றுச் செல்வத்தைத் துறந்து துன்புறுவர். அதோ தொலைவில் பொதுமகள் வருகிறாள். மயில்போல் நடந்து வருகிறாள். குயில்போல் மொழி சொல்லிக் கைதட்டி மக்கள் ஒதுங்க வருகிறாள். பசுமை வெய்யில் ஒளிபட பொற்பாவை விளங்குவதுபோல் விளங்குகிறாள். மக்கள் உள்ளத்தைப் பறிக்குமாறு தன் இருண்ட மையுண்ட கண்களால் நோக்குகிறாள். தன் தோளில் பொன்னாற் செய்த வந்திகை அணிந் துள்ளாள். அவள் துகிலும் கச்சமும் பொன் வரியும் பூத்தொழிலும் விளங்க அழகுற்று இருக்கின்றன.

முன்னும் பின்னும் வயிர் ஆர்ப்ப செல்வமகன் தேரோட்டி வருகிறான். பூப் பொறிக்கொண்ட கலிங் கம் செக்கர் வானம்போல் பொலிவுற, தோளில் அணிந்த மலர்மாலையும் மணிமாலையும் தூங்க, காலில் அணிந்துள்ள வீரக்கழல் ஒலிக்க, இரண்டு வெள்ளைக் குதிரை பூண்ட தேரைச்செலுத்தி வருகிறான். அப் பொது மகள் வீடுபோய், இரவை இன்பமாக அவள் மாளிகையிலும், வையை ஆற்றங்கரையிலும் கழித்து, நுண் தாது உண்டு, அப்பூவைவிட்டு நீங்கும் வண்டு போல் அவன் கைப்பொருளைக் கொள்ளைகொண்டு அவள் அவனைத் துறப்ப, அவன் வருந்துவன் போலும்.

முழுமதி ஒளி எங்கும் பரவிநிற்கிறது. வையை ஆற்றை நோக்கிச் செல்லுவோம். மணற்குன்றுகளில் அமர்ந்து யாழிசை எழுப்பி ஆடலும் பாடலும் கொள்ளுகின்றனர் பொதுமகளிர். பொதுமகளிரும் மருத நிலத்துச் செல்வக் காளைகளும் வையை ஆற்று நீரில் திளைத்து ஆடுகின்றனர். பொதுமகளிரோடு கைகோர்த்துத் துணங்கைக் கூத்து ஆடுகின்றனர். நடு யாமமும் கடுகி வருகிறது. நாமும் இந்த இரவை ஒரு இடத்தில் கழிப்போம்.

வாரணம் வைகறை இயம்ப, அந்தணர் வேதம் பாடப், பொழுதும் விடிந்தது. நாம் மருத நிலத்துப் பல மக்கள் வாழ்க்கையைக் கண்ணுற்றோம். அந்தணர் பள்ளியையும், அமணர் சேக்கையையும் கண்ணுற்று, அரசன் கோயிலையும், செல்வமகளிர் வாழும் இடங்களையும் சுற்றிப் பார்த்துச், சோழ மண்டலத் தலைநகராகிய காவிரிப்பூம் பட்டினத்திற்குக் கப்பலேறிச் செல்லுவோம்.

அமணப்பள்ளி, தேர்ந்தெடுத்த பல பூச்செடிகள் கொண்ட பூந்தோட்டத்தின் இடையே, மலையைக் குடைந்து அழகாக அமைத்த கோயில்போல் இருக்கிறது. அதன் தூண்களும், உத்திரங்களும் சிற்ப வேலை கொண்டு செம்பால் யவனர் இயற்றிய பாவை செறிந்தவைபோல் அழகுற்று விளங்குகிறது. எல்லாம் துறந்து தமிழ் மொழி வளர்ச்சிக்கே தங்கள் உடல் உள்ளம் உயிர் ஆவியைத் தத்தம் செய்து பல்லாண்டு தமிழ்ப் பணி செய்து வாழ்கின்றனர். நம் கோட்டைகளும், கோயில்களும் அழியலாம். நம் அரசர்களும் அமைச்சர்களும் சேனைத் தலைவரும் இருந்த இடம் தெரியாமல் மறையலாம். ஆனால்

இவ்வமணப் பேராசிரியர் தொண்டு என்றும் அழியாத் தொண்டே. இவர் சைவக் கொள்கையர் அல்லர், பௌத்தர்போல் எல்லா உயிர்களையும் தம் முயிர்போல் கொண்டு வாழ்கின்றனர். இவர் கோயில் களில் சிவன் கோயில்களில் காணுவதுபோல், இறை வன் உருவப்பாவைகள் கிடையா. இவர்கள் இறைவனை எங்கும் அன்பொளியாய்க் கண்டு வாழ் கின்றனர். இவர் நம் நாட்டு மக்களுக்குச் செய்யும் பணியை என்றைக்கும் போற்ற வேண்டியதே. இவர்க்குப் பிற்காலத்தில் என்ன தீங்கு சைவப் பெரி யார்கள் இழைப்பரோ? எங்கு ஓடி ஒளித்து மறை வரோ? இதை இறைவன்தான் அறிவர். இறைவன் கட்டையிலும் கல்லிலும் நீரிலும் தீயிலும் தோன்றிப் பல மக்களுக்குப் பலவாறு காட்சி அளிக்கிறன். இறைவனைத் தேடிச் செல்லுவோர் அவ்வாண்டவனை எங்கும் காணலாம். இறைவன் காட்சி சிவசமயத்தின ருக்கு மட்டும் தனித்த பொருள் அன்று. நம் பாண்டிய சோழ நாட்டு ஆசிரியர்கள் சமயப் பகை அற்றுச் சமணப் பெரியாருடன் ஒத்து உழைத்துத் தமிழ்க் கலையைப் பலவாறு பெருக்குகின்றனர். தென்பாண்டி நாட்டுத் துறைமுகத்தில் வினீஸிய வணிகரைக் கண்டு பேசிக்கொண்டிருந்தபோது, சிவசமயக் கொள்கைகள் போன்றவை தங்கள் நாட்டிலும், அவர் நாட்டுக்கு அணித்தாயுள்ள எகிபத் நாட்டிலும் இருக்கின்றன வென்று அவர்கள் சொல்ல நாம் கேட்க வில்லையா? ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்த ஆக்நாட்டன் என்னும் எகிபத் நாட்டு மன்னன் அத்தகைய கொள்கை கொண்டவன் என்று வினீஸிய மாலுமிகள் நமக்குச் சொல்ல

வில்லையா? பல சமயக் கொள்கைகளும் பல நாடு களில் தோன்றி மறையும், மறைந்து தோன்றும்.

பூக்கள் நிறைந்த பூக்கொடிகள் காற்றில் ஊச லாடுவதைப்பார். எங்கும் அமைதியாயிருக்கிறது. இத்தகைய இடமே கலை வளர்ச்சிக்குத் தக்க இடம். கல் சுவர்களில் புனைந்திருக்கும் சிற்பங்களைப்பார். எவ்வளவு நுட்பமாகச் சிறு உளி கொண்டு செதுக்கி யுள்ளார். அச்சிலைகள் கறுத்திருப்பது பலநாள் செல்லச் செல்லச் செம்பால் இயன்ற சிற்பங்கள் கரிய பச்சை நிறம் கொண்டு தோன்றுவதுபோல் தோன்று கின்றன.

ஒரு அமணப்பெரியார் ஏட்டுச்சுவடியை ஆழ்ந்து படிக்கிறார்; இன்னொருவர் பழைய ஏட்டுச் சுவடி களினின்று புதிய ஏடுகளில் பெயர்த்து எழுதுகிறார்; மற்றொருவர் புதிதாக ஏடுகளில் இலக்கியமோ, இலக்கணமோ எழுதுகிறார். அவ்வாறு எழுதுவதற்கு முன் அவ்வோலைகளுக்கு மஞ்சள் குழம்பு பூசுகிறார். இவ்வாறு செய்தால் அந்த ஏடுகள் பூச்சிகளால் சேத மடையாது என்பது போலும். எழுதி முடித்ததும் கரிவண்ணக் குழம்பு பூச எழுத்துகளெல்லாம் தெளி வாய்த் தோன்றுகின்றன.

ஒருவர், மூலையில் அமர்ந்து பல பூக்கள்கொண்டு பூமாலை தொடுக்கிறார். உறியில் இடப்பட்டுள்ள கலங்கள் கருங்கல்லால் செய்தவைபோல் கறுப்பாகத் தோன்றித் தொங்குகின்றன.

இவருள் சிலர் மக்களுடைய சென்ற காலத்தை யும் வருங்காலத்தையும் நன்குணர்ந்து அவருக்கு அவற்றைச் சொல்லுந் திறனுடையார். இயற்கையின் பலதோற்றத்தையும் நன்குணர்ந்து இறைவன் எங்

கும் இயைந்து நிற்பதை மக்களுக்குப் போதிக்கும் வல்லமை யுடையவர். தருக்கமும் தத்துவமும் கசடறக் கற்ற நூலறி புலவோர்.

இவ்வமணப்பள்ளியை நீங்கி அந்தணர் பள்ளியை நோக்கிச் செல்லுகிறோம். இப்பள்ளியும் அமணர் பள்ளிபோல் பல சிற்ப அழகு கொண்டு விளங்குகிறது. அந்தணர் வடநூலைக் குற்றமறக் கற்று; வடமொழியின் காவியக்கலை, இலக்கணக் கலை, தத்துவக்கலை, தருக்கக்கலை, கணிதக்கலை, சோதிடக் கலைகளைப் பெருக்கி வாழ்கின்றனர். துறவறம் பூணாது இல்லறத்தினின்றே இறைவனோடு இயைந்து வாழும் தூய்மை யுடையார். மறைநூலாகிய வேத நூல்களைக் காலையிலும் மாலையிலும் ஓதுவர். இதைக் கேட்டிருந்து மரங்களிலும் பொந்துகளிலும் வாழும் கிளிகளும் வேதம் பாடும். இவர்களும் அமணர்போல் ஏடுகளில் எழுதியும், பூத்தொடுத்தும், மாலையில் புகை எழுப்பியும், சுடர் கொளுத்தியும் ஆண்டவனை வணங்கி வாழ்கின்றனர்.

இனி செல்வமக்கள் வாழும் இல்லங்களைப் பார்ப்போம். கார் காலம் நீங்கி இளவேனில் காலம் தோன்ற மாளிகைகளின் சாளரங்கள் திறந்து கிடக்கின்றன. வீடு தங்கும் செல்வப் பெண்டிர்கள் சூரிய வெப்பம் நீங்கக் கார் காலத்தில் சிலந்தி வால் (வெள்ளை) நூல் வேய்ந்து பையில இடப்பட்டு வளைந்த தறியில் (ஆணி) தொங்கிக் கிடந்த விசிறிகளைக் கொண்டு இளங்காற்று வீச விசிறி இன்புறுகின்றனர். வெம்மை நீங்கக் கார் காலத்தில் மூலையில் கிடந்த ஆல வட்டத்தில் (சந்தனக் கல்லில்) சந்தனக்கட்டை கொண்டு சாந்து அரைத்துத் தங்கள் உடல்களில் பூசிக்கொள்ளு

கின்றனர். தொகுவாய்க் கன்னலில் (கூசா) இருக்கும் குளிர்ந்த நீரை வேட்கை தீரப் பருகுகின்றனர். யாழ் இசைத்து ஆடல் பாடல் நிழற்றி இன்பமாகக் காலங் கழிக்கின்றனர். மாலையும் வர விளக்குக் கொளுத்தி மலரும் விரையும் தூவி இல்லுறை தெய்வங்களை வணங்குகின்றனர்.மெல்லிய பூங்காற்று வீச, அகன்ற வாயையுடைய தூபமூட்டியில் புகை எழுப்பிக் குளிரைப் போக்குங் கார்காலம் நீங்கியதால் அத்தூப மூட்டிகள் ஒரு மூலையில் கிடக்கின்றன. அதுபோலவே கார் காலத்தில் குளிர் நீங்கி வெம்மையுற நறுஞ்சாந்து அரைக்கும் கொள்மணி போன்ற பல நிறங்களுடைய கல்லும் ஒரு மூலையில் பயனற்றுக் கிடக்கிறது.

முழுமதியும் தன் விண்மீன் செவிலிகளுடன் மாசற்ற நீல வானத்தில் ஒளிவிட்டுத் தன் தூய வெள்ளிய ஒளியை எங்கும் பரப்பி நிற்கின்றது. இளவேனில் காலத்து இரவு வேளை மிகவும் இன்பமாக இருக்கிறது. ஒரு சிறை (இடம்) தங்கிப் பொழுது விடிந்ததும் அரசன் கோயிலைச் சுற்றிப் பார்ப்போம்.

ஆறு கிடந்தால்போல் அகன்ற தெரு அரசன் கோயிலை வளைத்துச் செல்லுகிறது. கோயிலின் மதில் சுவர் வானம் அளாவி நிற்பதைப்பார். அரசன் கோயில் கோட்டையுமாகும். அதுபற்றியே அதைச் சுற்றி மதில் சுவர் வளைத்திருக்கிறது. கோயிலின் வாயில்படியில் வெண்மயிர் கவரிமான் கருங்கால் அன்னத்துடன் விளையாடுவதைப்பார். நாம் நெய்தல் நிலத்தில் ஆடும் சிவல் பறவையும் விளையாடுவதைப் பார்ப்போம். கோயிலின் வாயில்படி பொன் பொலிவு பெற்று விளங்க ஆற்று மணல் பரப்பி இருக்கிறது. அவ்

வாயில் நிலையின் சிற்ப அழகையும் உயர்ச்சியையும், கோள வடிவமான மாடத்தையும், சிங்காரமான கோபுரத்தையும் பார். வெற்றிக்கொடி ஏந்தி நிற்கும் யானையைக் காட்டிலும் அதிக உயர்ச்சியுடன் விளங்கு கிறது. அவ்வாயில் நிலையை மிக்க திறன்பெற்ற சிற்பி கள், மலையைக் குடைந்து அமைத்தால் போல், பல சிற் பங்கள் பொலிவு பெற அமைத்துள்ளார். அரசன் வாயில் திருமகள் இருப்பிடம் அல்லவா? அது பற்றி வாயிலின் பேரளவாய மேல் உத்திரக்கல்லில் உயிர் பெற்று விளங்கத் திருமகளின் உருவமும், அவள் இரு பக்கலிலும் யானைகளின் உருவங்களும் புனையப் பட்டுள்ளன. பேரளவாய வாயிலின் கதவுகளைப் பார். நெய்பூசிக் கறுத்திருக்கின்றன. பல யானைகள் அவற்றைத் தாக்கினும் அதற்குத் தகராத வண்ணம் இரும்புச் சட்டங்களால் பிணைக்கப்பட்டிருக்கிறது. வரிசை வரிசையாகக் கதவின் பலகைகள் நிரம்ப குவளை மொட்டுப் போன்று கூரியமுனை கொண்ட இரும்புப் பிடிகள் அமைத்துள்ளன.

பாண்டியன் நெடுஞ்செழியன் தனக்குப் பணி யாத அரசர்கள்மேல் படையெடுத்து அவரை முறி யடித்து, திறை கொண்டு வினைமுடித்து வருவான். அவன் இப்போது இங்கு இல்லாதபடியால், கோயில் பரிபாலிப்போர் நாம் அரசன் கோயிலைச் சுற்றிப் பார்க்க நமக்கு அனுமதி தந்துள்ளார். நாம் உள் சென்று கோயிலின் பல அழகையும் பார்த்து இன் புற்றுத் திரும்புவோம்.

கோயிலின் சிகரங்களிலும், கோபுரங்களிலும், பலநிறக் கொடிகள் வானவில் பொறித்தால்போல் அழகு பெற்று விளங்குகின்றன. இதுதான் அரசன்

கொலுமண்டபம். இதைச்சுற்றி வளைத்து நிற்கும் பிரகாரங்களின் அழகைப் பார். இம்மண்டபத்தின் பிரகாரத்தை நீலமணிபோன்று ஒளி பொருந்திய வழு வழுப்பான கருந்தூண்கள் நான்கு பக்கலிலும் தாங்கி நிற்கின்றன. இது பேரளவாய அரச மண்டபம். மூன்று அடி உயரத்திற்கு இந்த மண்டபத்தின் சுவர் களில் அழகாகச் சிற்பவேலை செய்திருப்பதைப்பார். போர் முனையில் வீரன் வீரனை வில்லாலும், வாளா லும், வேலாலும், தாக்கி வீழ்த்துவதைக் கூருளி கொண்டு புனைந்துள்ளார்;இன்னொரு பக்கலில் யானை யானையைத் தாக்குவதையும், யானையை மறவன் தாகக அதன் துதிக்கை அறுபட்டு நிற்பதையும் பார்; இன்னொரு பக்கலில் சேனைகள் ஒன்றை ஒன்று தாக் கப் புழுதி கிளம்பி, தேரும், யானையும், குதிரையும் தோன்றியும் மறைவுற்றும் இருக்கின்றன. இச்சுவர் களின் மேல்பாகம் வெண்சாந்து ஊட்டிப் பல வண் ணங்களால் குவளைக் கொடிபோல் சித்திரித்து விளங்குகின்றது. இம்மண்டபத்தின் தரையில் பல நிறப் பூப் பொறித்த சாதிலிங்க வண்ண விரிப்பு விரித்திருக்கிறது; இம் மண்டபத்தின் நான்கு மூலையி லும் சிற்பத்திறன் பெற்ற யவனர்கள் வெண்கலத்தில் புனைந்த பாவை விளக்குகள், புன்சிரிப்புடன் கையில் அகல் ஏந்தி நிற்பதைப்பார். அரசன் பீடம் (சிங்கா தனம்) அமைத்திருக்கும் மேடையின்மேல் இந்திர கோபம் போன்று ஒளிவிடும் விரிப்பு விரித்திருப்ப தைப்பார். இம் மேடையின் மேற் படப்பை யானைக் கொம்பு கொண்டு புனைந்த மெல்லிய தூண்கள் தாங்கி நிற்கின்றன. அவைகளைச் சுற்றி மூன்று பக்கலிலும் பூ வேலையாகப் புனைந்த முத்துத்

திரைகள் தொங்கா நிற்கின்றன. அரசன் பீடத்தை நான்கு பக்கலிலும் நான்கு யானைகள் தாங்கி நிற்கின்றன. சிங்காதனத்தின் பின் நிலையில், பல வண்ணத் துண்டுத் துணிகள் கொண்டு விரைந்து ஓடும் வரிப்புலியையும், அவ்விலங்கைத் தொடர்ந்து செல்லும் வேட்டை நாய்களையும், பறை அடித்து அந்த வயமானை வளைத்து நிற்கும் வேடர்களையும், வில்லும் வேலும் கொண்டு அப்புலியைத் தொடரும் வீரர்களையும் சித்திரித்த திரை தொங்கா நிற்கின்றதைப் பார்.

இந்த மண்டபத்தின் பாவு (மச்சு) களில் பல நிறக் குழம்பால் தாமரை மலரும், (நட்சத்திரம்) விண்மீன் போன்ற சிக்குண்ட முக்கோணங்களும், சதுரக் கோலங்களும் அவைகளின் இடையே அன்னப் பறவையும், கண்ணைப் பறிக்குமாறு சித்திரித்துள.

நான்கு பக்கலிலும் தூண்கள் தாங்கி நிற்கும் உத்திரங்களின் சிற்பவேலைகளையும், நான்கு சுவர்களின் கழுத்துப பட்டைகளின் சுண்ணங் கொண்டு புனைந்த சிற்பவேலைகளையும், தூண்களின் இடை இடையே பரவி நிற்கும் போதிகைப் பலகைகளின் கூருளி வேலைகளையும் உற்று நோக்கிப்பார்.

இம்மண்டபத்தின் பாவி நின்று (மச்சு நின்று) பூவேலை செய்த (புகைக்கலசங்கள்) தூபமூட்டிகள் சங்கிலியில் தொங்கா நிற்கின்றன.

அரசியின் கோயிலினுள் அரசனைத் தவிர்ந்து வேறு ஆடவர் புகாது வாளேந்தி வீரமகளிர் காத்து நிற்கின்றனர். அதுபற்றி நாம் அங்குச் செல்ல முடியாது. அரசியும் போர்முனையின் கண்ணுள்ள தன் தலைவனை நினைந்து குவளை மலர்போன்ற தன்மை

யுண்ட கண்களில் அரிப்பனி போலும், முத்துமாலை போலும் நீர் சொரிந்து வருந்திக் கிடக்கிருள். வீர மன்னனுகிய பாண்டியன் வெற்றி பெற்றுத் திரும்பு வான் என்பதில் ஐயமுண்டோ ?

## 2. நெய்தல்

நாம் பாண்டிய மன்னர் அரசாளும் மதுரையை விட்டுக் கப்பலேறிச் சோழ நாட்டு மன்னர்களின், பல வளங்கள் நிரம்பிய, காவிரி கடல் சேரும், துறை முகத்தை நோக்கிச் செல்லுகிறேம். அதோ, தொலை வில் பாய் விரித்த பல கப்பல்கள் தேர் பூண்ட வெள்ளைப் புரவிகள் போல் அசையாது நிற்கின் றன. இத்தகைய காட்சியைப் பாண்டி நாட்டின் துறைமுகத்தில் கண்டு களித்தோம். நங்கூரம் இட்டு அசையாது நின்ற அக் கப்பல்கள் பசுமை நிலங்களிலே போர் வீரர்கள் தங்கும் கூடாரங்கள் போல் தோன் றின. இக் காட்சியும் அதுபோலவே நம் உள்ளத்தைப் பறிக்கின்றது. காவிரி ஆறு கடல் சேரும் பேரொலி நம் காதில் இடிமுழக்கம்போல் படுகின்றது. கார் காலப் பெருக்குற்று, முரசு முழக்கம்போல் பேரொலி பரப்பி நுரைத்துக் காவிரியாறு கடல் சேரும் காட்சி வெண்மழை (மேகம்)த் தொகுதிகள் நீல மலைகளின் மேல் அமர்ந்திருப்பதுபோல் தோன்று நிற்கின்றது. என்ன இயற்கை அழகு! என்ன இயற்கையின் இன்னிசை! இதோ கடற்கரையையும் சேர்ந்தோம். கடற் கரையின் கண் ஆரை தாழை வேய்ந்த நெய்தல் மக்களின் குடிசைகள் வரிசை வரிசையாய் நிற்கின் றன. கதிரவன் பல் கதிர் பரப்பி எங்கும் தன் அவிர் ஒளியைப் பரப்பி நிற்கின்றுன். நெய்தல் நில மக்கள்

கடல் சென்று மீன் கொள்ளாது கூட்டங் கூட்டமாய் அமர்ந்திருக்கின்றனர். கடல் கரை ஓரத்தில் கப்பல் களில்வந்த பொருள்களெல்லாம் பாறைகளைப் படுத்து வைத்தாற்போல் குறுக்கும் நெடுக்குமாய்க் குவிந்து கிடக்கின்றன. ஆடுகளும கூரிய நகமுடைய நாய் களும் அவைகளின்மேல் தாவித் தாவி விளையாடு கின்றன. அபபொருள்கள் பலதிறப்பட்டனவாயிருக் கின்றன. அரேபியா நாட்டினின்று நீரில் வந்த குதிரைகள் தறிகளில் அசைவற்று நிற்கின்றன. கரு மிளகு மூட்டைகளும், பனிமலையினின்று கொணர்ந்த பல்வண்ண மணிகளும், பொன்னும், மேற்குத் தொடர்ச்சிமலையின் சந்தனக் கட்டையும் அகில் கட்டையும், தென் கடல் குளித்துக்கொண்ட முத்தும், கிழக்குக் கடலில் பிறந்த பவழமும், கங்கையாற்றின் வளம் பெற்ற நாடுகளின் பொருளும், காவிரி கொணர்ந்த பலதிறப் பண்டங்களும், கிழக்குக் கட லிற்குக் கிழக்கேயுள்ள காழக நாடென்னும் பர்மா நாட்டின் விளைபொருளும், இலங்கைத் தீவினின்று கொணர்ந்த நுகரும் பொருளும், குவியல் குவியலாகக் கிடக்கின்றன. இச்சோழ நாட்டு மாலுமிகள் கொணர்ந்த பொருள்கள் சுங்கம் கொள்ளப் புலிப் பொறி இட்டுக்கிடக்கின்றன. சோழ மன்னனுக்குப் புலிக்கொடியோன் என்றும், பாண்டி மன்னனுக்கு மீன் கொடியோன் என்றும் சேரமன்னனுககு வில் கொடியோன் என்றும் பொதுப் பெயர் உண்டு.

சோழ நாட்டு நெய்தல் நில மக்கள் மிகச் சிறந்த மாலுமிகள். பல கடல் சென்று பல பொருள் கொணர்ந்து தங்கள் தாய் நாட்டின் வளப்பத்தைப் பெருக்குகின்றனர். கிழக்கே காழகம் என்னும் பர்மா

நாடு வரைக்கும், மேற்கே அரேபியா நாடு வரைக் கும், அதற்கப்பால் இருக்கும் கார்த்தேஜ், துருவு என்னும் மத்திய தரைக் கடல் துறைமுகங்களுக்கும் செல்லுகின்றனர். தமிழ் மக்களின் கப்பல்கள் பாய் விரித்து நூற்றுக்கணக்காக அத்துறைமுகங்களில் இருக்கின்றன. மிகச் சிறந்து விளங்கிய வினீஸியா நாட்டு மாலுமிகள் நம் தமிழ் நாட்டுத் துறைமுகங் களுக்கு வந்து நம் நாட்டுப் பொருளாகிய யானைத் தந்தம், சந்தனக் கட்டை, அகில் கட்டை, மிளகு, ஏலக்காய், பட்டை, இலவங்கம், மயில் தோகை, முத்து, பவளம் என்பவைகளைத் தங்கள் நாட்டுக்குக் கொண்டு போகின்றனர்.

இவ்விடம் பெயர்ந்து அதோ தூரத்தில் தாழை, நொச்சி மரங்களினிடையே அணிவகுத்து நிற்கும் குடி இருப்பினுக்கு நாம் போவோம். நெய்தல் நில மகளிர் உறைக் கிணற்றினின்று நீர் கொண்டு தலையில் குடங்களையிட்டு அழகாக வீடு நோக்கிச் செல்வதைப் பார். சில மகளிர் தங்கள் வீட்டு முற்றங்களில் அமர்ந்து வலைகளைப் பழுது பார்த்த வண்ணமாய் மணலில் உலரும் கருவாடுகளைக் காக்கின்றனர். அதோ குப்பை மேட்டில் கோழியும் வான் கோழியும் நிலத்தைச் சீத்துச் சீத்து இரைதேடி உண்ணுகின்றன. பன்றிகள் தங்கள் பல குட்டிகளோடு கீச்சு, கீச் சென்ற ஒலி எழுப்பி இங்கும் அங்கும் இரை தேடி ஓடுகின்றன. அதோ குட்டைகளில் வாத்துகள் ஞெண்டையும், கெண்டையையும் பிடித்துப் பிடித்து விழுங்கித் தின்கின்றன.

வலைஞர்கள் பனிக் கடல் சென்று மீன் வேட்டம் போகாது இங்கும் அங்கும் விரைவாகச் செல்லு

கின்றனர். அவர்களுடைய வலைகள் முழுமதி நிலவு போல் வட்டமாய் வெண் மணலில் உலர்கின்றன. காவிரி ஆற்றுக்குச் சென்று செங்கண் வரால் மீன்களை யும், பெருங்கழுத்து வாளை மீன்களையும் தூண்டில் கொண்டு பிடியாது அத்தூண்டில் கழிகளைத் தங்கள் கூரைகளில் சொருகி இருக்கின்றனர். அவைகளின் பக்கலில் மீன் இரை தோல்பைகளும் தொங்கு கின்றன.

இன்று முழுமதி நாள். நெய்தல் நில மக்கள் சிறப்பாக விழாக்கொண்டு களிக்கும் நாள்.

கோயிலைத் தென்னை மரத்தின் இளங்குருத்துக் களால் கொடியாகவும் கோதையாகவும் புனைந்து அழ காக அலங்கரிக்கின்றனர். சூரியன் விரைவில் நீல மலை களின் பின் இழிந்து மறைவான். ஆடவர்களும் பெண்களும் கடலில் விளையாடிக் குளிக்கின்றனர். அதன் பிறகு தங்கள் உடலில் பற்றிய உப்பு நீங்கக் குளங்களில் குளிப்பார்கள். பட்டுடை உடுத்துத் தாழைப்பூவை அழகாகத் தலையிலிட்டு விழாக் கொள்ளப் பெண்ணும் அவருடன் ஆணும், முதி யோரும் இளையோரும் கூட்டம் கூட்டமாய் இந்திரன் கோயில் நோக்கிச் செல்லுகின்றனர். ஞாயிறும் பொன் தட்டம் போல் பொலிவுற்று மேற்கில் மறை கிறான். கிழக்கில் முழுமதி நீலக் கடலினின்றும் சிறிது சிறிதாகத் தோன்றுகிறது. இரவும் கடுகி வருகிறது. செல்வ மக்கள் தங்கள் மாடங்களில் விளக்கேற்றி அழகு படுத்துகின்றனர்.

பெண்கள் ஒரு பக்கலிலும், ஆண்கள் ஒரு பக்க லிலும் எண்ணாள் திங்கள்போல் அரை வட்டமாய்க் கோயிலின் முன் நட்டிருக்கும் சுறவு மீன் கொம்பைச்

சுற்றி நிற்கின்றனர். கிழக்கில் முழு மதியும் கடலி னின்று வெளித்தோன்றி எங்கும் தன் ஒளியைப் பரப்புகின்றது. இனி விழாத் தொடங்க வேண்டியது தான்.

நெய்தல் மக்களின் நரைமுடித்தலைவர் அரையில் கச்சம் கட்டி சுறவுமீன் கொம்பின் பக்கலில் பணி வுடன் நிற்கின்றார். வெண்துகில் உடுத்த நான்கு மகளிர் பெரிய கடல் ஆமை ஓட்டில் கடல் நீரை முகந்து அதைத் தங்கள் தோள்களில் நாலு மூலை யாகத் தாங்கி அக்கூட்டத்தை நோக்கிச் செல்கின் றனர். அவர் செல்லும் தோற்றம் முழு மதியே நான்கு விண்மீன்கள் சூழச் செல்லுவது போல் பொலிவு பெற்று விளங்குகிறது. இவர்கள் வருகை யைக் கண்டதும் இவர்களுக்கு வழிவிட்டு விலகி நிற்கின்றனர். கடல் நீர் கொண்ட ஆமை ஓட்டைச் சுறவு மீன் கொம்பின் முன்னாக வைத்து விட்டுப் பெண்கள் நிற்கும் இடம் சேர்கின்றனர். தலைவர் அந்நீர் கொண்டு அச்சுறவு மீன் கொம்பைக் கழுவி மஞ்சள் பூசிக் குங்குமப் பொட்டிடுகிறார். சங்கும், கொம்பும் ஒலிக்க, இரண்டு நெய்தல் காளையர் கால் களைக்கட்டிய ஆத்திப்பூப்போன்ற கோரைப் பல்லு டைய கொழுத்த பன்றியை மூங்கில் கொம்பில் தொங்கவிட்டுத் தங்கள் தோள்களில் தாங்கி அக் கூட்டத்தை நோக்கிச் செல்லுகின்றனர், இவர்களுக் கும் அக்கூட்டத்தினர் வழி விட்டு விலகி நிற்க, உள் சென்று அப்பன்றியைச் சுறவு மீன் கொம்பின் முன் கிடத்தி நிற்க, அக்கூட்டத்தின் தலைவர் கரு நொச்சி மாலையை அப்பன்றியின் தோளிலிட்டு அதன்மேல் கடல்நீரைத் தெளித்து அதன் பக்கலில் நிற்கின்றனர்.

வாள் ஏந்திய காளை ஒருவன் அப்பன்றியைப் பலி கொடுக்கக் கையை உயர்த்த சங்கும், கொம்பும் பறையும் பேரொலி எழுப்ப, ஒரே வெட்டில் உடலும் தலையும் வேறாக அப்பன்றி குருதியில் இருக்கின்றது. அக்கூட்டத்தின் மக்கள் ஒவ்வொருவராய் அக்குருதியை விரலில் தொட்டு நெற்றியிலிட்டு இந்திரன் கோயில் நோக்கிச் செல்லுகின்றனர். அவர்கள் அணி வகுத்து அழகாகச் செல்லுவதைப் பார். யாழ்மகளிரும் பாணரும் முன்செல்ல அவர்களைத் தொடர்ந்து நெய்தல் தலைவன் முன்னாகவும், அவர் பின்னே மைந்தரும், மகளிரும் அமைதியாகச் செல்லுகின்றனர். அவர்கள் கோயில் புகுமுன் நாமும் அவர்களோடு கலந்து கொள்வோம். இந்திரன் கோயில், செறிந்த இலைகள் கொண்ட தெங்கின் சோலையின் குளிர்ந்த நிழலில் அமைந்திருக்கிறது. எல்லோரும் கோயில் புகுகின்றனர்; கோயிலின் வாயிலில் நின்று ஒரு இளையோன் சங்கை ஊதுகின்றான். இது பூசைத் துவக்கத்திற்குக் குறியாகும். அவன் ஊதி முடிந்ததும், வயிர் ஆர்ப்ப, முழவு இமிழ, முரசு இயம்ப, யாழ் மகளிர் யாழைச் செவ்விதாகப் பண்ணுமுறை நிறுத்தி வாசிக்கின்றனர். கூத்தர் சிலம்பொலிக்க நாட்டியம் செய்கின்றனர். நெய்தல் தலைவன் இறைவனை வணங்கிய பிறகு எல்லோரும் வணங்கித் தங்கள் தங்கள் வீடு போகின்றனர். நிலா வெளிச்சம் வெண்துகில் போர்த்தாற்போல் தன் வெண்கதிர்களைப் பரப்புகின்றது. ஆடவர்களெல்லாரும் வரிசை வரிசையாக விருந்துண்ண வெண்மணலில் அமர்கின்றனர். சிறிது தொலைவில் பெண்களும் அவ்வாறே விருந்துண்ண இருக்கின்றனர்; கூட்டத்

தின் தலைவர் நம்மையும் விருந்தோம்பப் புன் முறுவ லுடன் நம்மை நோக்கி வருகின்றனர். நாமும் அவர்க ளோடு அம்மணலில் அமர்ந்து விருந்துண்ணுவோம். விருந்தோம்பல் தமிழ் மக்களின் சிறந்த குணமாகும்; அதற்கு ஒக்க நமக்கும் சோறு அளிக்கின்றனர். கொழுத்த பன்றி இறைச்சி கலந்த தினைச்சோற் றையும், கொல்லன் குறடு போன்ற கால்களையுடைய நண்டு இறைச்சியையும், கடலாமையின் இறைச்சி யையும் தின்றுபார். எவ்வளவு சுவை உள்ளனவாய் இருக்கின்றன! சோறு உண்ணுதல் முடிந்தது. பல கலங்களைப் பரப்பி நமக்குத் தெவிட்டுமளவும் இனிய கள் தேறலை கலங்கள் நிறைய வார்த்துப் பருகச் செய்கின்றனர். தேறல் மாந்தி மயக்கமுற்று ஆண்கள் ஆடல் பாடல் கொள்ளுகின்றனர். நாமும் அதைச் சுற்றிப்பார்த்து இன்பமெய்திப் பட்டினம் நோக்கிச் செல்வோம். தலைவரும் தலைவியரும் கை கோத்து இருவர் இருவராக துணங்கைக் கூத்து ஆடு கின்றனர். காளையரெல்லாரும் மணல் குவியல்களில் அமர்ந்து தொண்டோடு தொண்டு விட்டுச் சண்டை செய்வித்தும், ஆட்டுக்கடாவுடன் சிவல் பறவை விளையாடிச் சண்டையிடுவதைப பார்த்தும் இன்புற் றுக் கைகொட்டிக் களிக்கின்றனர். ஆட்டுக்கடா சிவ லைத்தன் முறுக்குண்ட கொம்பால் குத்தத் தாவி வர, சிவல்பறந்து பின் ஓடுகிறது; பிறகு அது முன் வந்து ஆட்டுக்கிடாவின் முகத்தைத் தன் மூக்கால் குத்திப் பின் ஓடுகிறது. இப்படி இவர்கள் விழாவைக் கொண் டாட மகளிர்களெல்லாரும் மணற்குன்றில் அமர்ந்து நெய்தல் யாழை வாசித்து ஆடியும் பாடியும் இன்புறு கின்றனர். சில பெண்கள் கழங்கு ஆடுகின்றனர்.

மாடமாளிகைகளில் உள்ள செல்வப் பெண்டிர்கள் தங்கள் மாடங்களினின்று இவற்றை நோக்கி இன்புறு கின்றனர். விழாவும் முடிந்தது. நாமும் இந்த இரவை கடல் கரையில் கழித்துச் சூரியன் தோன்ற ஊரினுள் செல்லுவோம்.

காவிரிப்பூம் பட்டினம் என்னும் பூம்புகார் இது. சோழமண்டலத்தின் தலைப்பட்டினம் ஆகும். இதன் அரசன் கரிகாற் பெருவளத்தான். இவ்வரசனுக்கு உரியன புலி பொறித்த கொடியும் ஆத்தி மாலையு மாகும். தென் தமிழ் நாட்டைப் பாண்டி மண்டலம், சேரமண்டலம், சோழமண்டலம், என்னும் மூன்று பிரிவாக வகுத்துள்ளார். சோழநாட்டின் பல வளங் களையும் சுற்றி நோக்கி இங்குச் சில நாள் தங்கித் தொண்டைமண்டலத்தைச் சேருவோம். குடகுமலை யில் தோன்றி அம்மலைநாட்டின் பல வளங்களையும் கொணர்ந்து குவிக்கும் காவிரியாறு, குணகடலுக்கு அணித்தாயிருப்பதால் சோழநாட்டுச் சிறந்த மாலுமி கள் எழுகடல் சென்று அங்குள்ள பொருள்களைக் கொணர்ந்து இந்நாட்டின் வாணிகத்தைப் பெருக்கு கின்றனர்.

மதுரையின் கண்ணுள்ளன போல் இங்கும் அங் காடித் தெருக்கள் உள. இப்போது அங்குதான் செல்லுகிறோம். பொன்னும் பொற்பணிகளும், முத் தும், மணியும், பவளமும் விற்போர்கள் தங்கள் பொருள்களைக் குவித்து விலைகூறி விற்பதைப் பார். ஒருசார் கிழியாலும் கிடையாலும் (சடை) வண்ணம் ஊட்டிப் புனைந்த மாலைகளை விற்பார் நிற்கின்றனர். ஒருசார் நறுமணந் தோய்ந்த பலபூக்களைப் பலவாறு தொடுத்துத் தட்டங்களில் அழகுபெறப் பரப்பி விலை

கூறி விற்கின்றனர். குவியல் குவியலாக மருதம், முல்லை குறிஞ்சி, நெய்தல் நாட்டுப் பொருள்கள் குவித்திருப்பதைப்பார். ஒரு சார் பாவைகள் போன்ற இஞ்சியும், ஒருசார் மஞ்சளும், ஒருசார் வேல்போன்ற கரும்பும், ஒருசார் தினையும், ஒருசார் வரகும், ஒருசார் செந்நெல்லும், ஒருசார் இராசான்னம் என்னும் நெல்லும், ஒருசார் மலைநாட்டுக் கிழங்குகளும், ஒருசார் வெள்ளை உப்பும், ஒருசார் கருவாடுகளும், குவித்திருப்பதைப் பார். ஒருசார் வண்ணமும் சுண்ணமும் விரையும் அகிலும் ஆரமும் குவிந்துக் கிடக்கின்றன. மகளிர்களும் சிறுவர்களும் பட்டுத் துகில் விற்பாரைச்சுற்றியும், கிழியாலும் கிடையாலும் செய்த பறவைகளும் விலங்குகளும் குவித்திருக்கும் இடத்தைச் சுற்றியும் நிற்கின்றனர்.

சந்தைப் பேட்டையை விட்டுக் குடிமக்கள் வாழும் பல தெருக்களின் வழியாகப் போகிறோம். ஒவ்வொருதொழில் செய்பவர் ஒவ்வொரு தெருவில் வசிக்கின்றனர். நெடுநுகத்துப் பகலாணி போல் தமவும் பிறவும் ஒப்பநாடி, கொள்வதும் மிகையாகக் கொள்ளாது கொடுப்பதும் குறைவாகக் கொடாது வாணிக அறம் செய்து மாடங்கள் அமைத்து இத்தெருவில் வாழ்கின்றனர். ஒருபால் தச்சரும், கொல்லரும், கன்னரும், உருக்குத்தட்டாரும், இரத்தினப் பணித்தட்டாரும் வாழ்கின்றனர். ஒருபால் ஓவியர்களும் சிற்பிகளும் காருகரும் (துணி நெய்வோரும்) இல்லங்கள் எடுத்து இன்பமாக வாழ்கின்றனர். தனியாகப் பிற நாட்டு யவனரும், மிலேச்சரும் வாழ்கின்றனர்.

வேளாளரும், பார்ப்பனரும், மருத்துவரும், சோதிடரும் தனித்தனிக் கூட்டமாக வாழ்கின்றனர்.

ஆற்றிற்கு அணித்தாகத் தனிக்கோயில்கள் அமைத்து அறிவை வளர்த்தும் பெருக்கியும் வாழ்கின்றனர் மறை நூலோரும் சமணரும். மறை நூலோர் கசடற வடமொழி கற்று அச்சிறந்த மொழியை வளர்த்துப் பெருக்குகின்றனர். ஒரு சிறிதும் தளராது தமிழ்ப் பணி செய்து துறவற வாழ்க்கை நடாத்துகின்றனர், தமக்கென்று வாழாது, பிறர்க்கென்று வாழும் தமிழ்ச் சமணர்கள்.

அரசன் கோயிலைச் சுற்றி, யானைப்பாகரும் தேர்ப் பாகரும் மறவரும் சூதரும் மாகதரும் நாழிகைக் கணக்கரும் குற்றேவல் செய்வோரும் வாழ்கின்றனர்.

இடையில் காவிரி ஆற்றங் கரையில் சிறுகுடி அமைத்து இன்ப வாழ்க்கை நடத்தும் மக்களையும் காண்போம். வைக்கோல் வேய்ந்த குடிசைகள் வரிசை வரிசையாகவும் அழகாகவும் அமைந்துள்ளன. கொடு முடி வலைஞர் ஆற்றிலும் கடலிலும் பிடித்த வரி கொண்ட இருல் மீனையும், பருத்த தோளையுடைய வாளை மீனையும், சிவந்த கண்களையுடைய வரால் மீனை யும் பரப்பி விற்கின்றனர். அந்தச் சிற்றூரிலுள்ள மக்கள் அதைப் பெற்றுத் தங்கள் வீடு சென்று மரங்க ளின் அடியில் அமர்ந்து மீன்களைச் சீவுகின்றனர். கருங்காகங்கள் அம்மரக்கிளைகளில் அமர்ந்து தங்கள் இனத்தை விருந்தோம்பக் கூவி அழைக்கின்றன.

தென்னை மரங்களும், பாக்கு மரங்களும், பலா மரங்களும், மாமரங்களும் செறிந்த சோலையில் வெண் சேறு தீட்டி வெள்ளிபோல் ஒளி விட்டு நிற்கும் மாளிகையை அணுகுவோம். இது மாளிகை அன்று. ஆசிரியர் கூடும் அவைக்களம். அதுபற்றியே இவ்

வளவு இயற்கை அழகும் அமைதியும் உள்ள இடத்தில் அமைந்திருக்கிறது. எங்கும் இந்த அவைக்களத்தைச் சுற்றிப் பலவண்ணச் சிறு கொடிகளும் பெருங் கொடிகளும் காற்றில் ஆடி ஆடி அலைகின்றன. இன்று ஆசிரியர் கூடும் நாள் போலும். நாமும் உள் சென்று அங்கு அமர்ந்து அவ்வாசிரியர்களின் இடையே பிறக்கும் வாதையும், நூலறி புலவோர்களின் இலக்கண இலக்கியச் சொற்பொழிவுகளையும் கேட்டு அறிவு பெறுவோம்.

சற்று நில். அதோ தொலைவில் நான்கு வெள்ளைக் குதிரைகள் பூண்ட தேர் இச்சபைக் களத்தை நோக்கி வருகிறது. குதிரைகளின் ஓரி அசையும் அழகையும், அவைகளின் கழுத்திலும் புறத்திலும் இட்ட சிறு மணிகளின் மெல்லிய ஓசையையும் பார். அத்தேரின் முன்னே வயிரும் வளையும் ஊதிக் காலாட்கள் வழி விலக்கி வருகின்றனர். இது அரசன் தேர்போலும். அதைத் தொடர்ந்து இன்னொரு தேர் வருகிறது. அச் சபைக்களத்தின் வாயிலில் ஆசிரியர்களின் தலைவர் முக மலர்ச்சியுடன் அரசன் அரசி அமைச்சர்களை வரவேற்று நிற்கின்றனர். தேர்களினின்று அரசரும், அமைச்சரும், அரசியும் அவள் தோழியும் இழிந்து உள் நுழைய யாழ் வாசிக்க அங்குள்ள ஆசிரியர்கள் அவர்களை வணங்கி நிற்கின்றனர். அரசன் தன் இருக்கையில் அமர அமைச்சர் ஒரு பக்கலிலும் அவ்வாசிரியத் தலைவர் இன்னொரு பக்கலிலும் அமர்கின்றனர். ஐம்பொறி அடக்கி அறிவு வளர்த்து வாழும் அந்தண முனிவர் அரசனுக்கும் அரசிக்கும் மங்கள வாழ்த்துக் கூற எல்லோரும் தங்கள் தங்கள் இருக்கைகளில் அமர்கின்றனர்.

அரசியும் அவள் தோழியும் கலைகற்ற பெண்களின் இடையே அமர்ந்திருக்கின்றனர். நம் நாட்டுப் பெண்களில் பலர் ஆண்மக்கள் போல இலக்கண இலக்கிய அறிவு நிரம்பப்பெற்றுள்ளார். முடத்தாமக் கண்ணியார் போன்ற காவியத் திறம் பெற்ற பெண் பாலரும் உளர்.

ஓலை வாசிப்போர் மேடைமேலேறி அரசனையும் அரசியையும் ஆசிரியத் தலைவரையும் அமைச்சரையும் வணங்கி அங்கு அன்று நடைபெறுவன இன்னவென்று தெரிவித்து அமர்கிறார்.

வாது கூறுவோர் எழுந்து வாது கூறுகின்றனர். சிலர் இலக்கணத் தர்க்கம் செய்கின்றனர். சிலர் பண்டைக்காலத்துத் தமிழ்க் காவியங்களின் சிறப்பை விரித்துக்கூறி விளக்குகின்றனர். வாதும் தர்க்கமும் முடிவுற ஓலை வாசிப்போர் வாசித்தார். அரசி பக்கலில் அமர்ந்திருந்த முடத்தாமக் கண்ணி அம்மையார் மேடைமீது ஏறி அரசனையும் அரசியையும் அங்கு குழுமியுள்ள பேராசிரியரையும் வணங்க, அரசன் தன் இருக்கையினின்று எழுந்து அவர்பால் தான் உற்ற பெருமதிப்பைத் தெரிவித்து அதன்பின் தன் இருக்கையில் அமர்கிறான்.

தான் இயற்றிய பொருநராற்றுப் படையை கரிகாலன்முன் படித்து முடிக்க, அச்சபைக்களத் தலைவர் அக்காவியத்தின் பல சிறப்புகளைப் போற்றி அவ்வம்மையை வாழ்த்துகிறார். அரசன் தன் கையிலுள்ள மணிப்பதக்கங் கொண்ட முத்துமாலையை அரசியிடம் கொடுக்க அவ்வரசியார் அம்மாலையை முடத்தாமக் கண்ணியார் தோளில் இட, இசை யெழுப்பி, கை கொட்டி அக்கூட்டத்தினர் ஆரவாரம் செய்கின்றனர்.

அரசனும் அமைச்சரும் தங்கள் தேரில் அமர, அரசியும் அவர்பக்கலில் முடத்தாமக் கண்ணியாரும் அமர, அரசியின் தேரும் அரசன் தேரைத் தொடர்ந்து செல்லுகிறது.

ஆசிரியர்களும் தங்கள் வீடுகட்குப் போகின்றனர். நாமும் தங்குமிடம் நாடிச் செல்லுவோம். முடத்தாமக் கண்ணியார் யாழின் அமைப்பை எவ்வளவு அழகாக வும் நுட்பமாகவும் சொல் கொண்டு சித்திரித்துள் ளார் என்பதை நீ உற்று நோக்கினையா? அவ்யாழை வாசிக்கும் முறையை 'வாரியும் வடித்தும் உந்தியும் உறழ்ந்தும்' (தழுவியும், உருவியும், ஒரு நரம்பையும் பல நரம்பையும் எறிந்தும்) என்று சுருங்கச் சொன் னார். பெண்களுக்கு உரியது யாழ் அல்லவோ? அதைத் திறனுடன் வாசிப்போர் பெண்பாலர் அல்லரோ? யாழின் மெல்லிய ஒலியுடன் பெண் பாலரின் மெல்லிய மிடற்றொலியும் ஒன்றுபட்டுக் கல்லையும் உருகச் செய்யும் அல்லவோ? அது பற்றியே தன் காவியத்தின் முதலடிகளில் யாழின் சிறப்பை யும் அழகையும் அமைத்தார். அது கல் நெஞ்சுடைய கள்வர் மனத்தையும் உருகச் செய்யும் என்கிறார்.

முடத்தாமக் கண்ணியார் பெண்பாலர் அல் லரோ? தூய்மையுற்ற கற்பரசிகளில் ஒருவர் அல் லரோ? அத்தகைய அம்மையார் பாடினியின் உட லழகை முடியினின்று தாள்வரை அழகாகப் புனைந் துள்ளார். என்ன ஓவியத்திறன்! என்ன இன்னிசைச் சொல் கொண்ட யாமொலி! வெயில் பொறுக்க வொண்ணாது வலை வேய்ந்தால் போன்ற இலையற்ற மரக்கிளைகளின் நிழலில் தங்கினார் என்கிறார். பாடி னியின் தாளில் தோன்றிய கொப்புளத்திற்கு மரல்

செடியின் பவழ நிறங்கொண்ட பழத்தை உவமைப் படுத்துகிறார். குழலோசையும் இயற்கை அழகும் அக்காவியத்தில் எங்கும் பரந்து கிடக்கின்றன. நம் நாட்டுத் தமிழ்ப் பெண்களே பல கலைகளுக்கும் முதலும் முற்றுமாய் விளங்குகிறார்கள். ஓவியத்தில் அவர் அழகைக் காணலாம். சிற்பங்களில் காணலாம். காவியங்களில் காணலாம். அவர் மிடற்றொலியே யாழின் இசை யொலி. அவர் சாயலே பல நாட்டியங் களின் சாயல். அவர் அன்பே எங்கும் பரந்து நிற்கும். அவர் தூய்மையே இப் புவியைத் தூய்மைப் படுத்தும் கதிரவன் ஒளி.

## 3. முல்லை

நான்கு வெள்ளைக் குதிரை பூண்ட தேரைத் தெற்கில் செலுத்தி மேற்கு மலையின் பின் ஞாயிறு மறைகிறான். அத்தோற்றத்தின் அழகைப் பார். மலை களின் உச்சி பல மணி இழைத்த திருமாலின் மணி முடி போல் விளங்குகின்றது. மேற்கு வானம் பல மணி இழைத்த திரைபோல் ஒளி விடுகின்றது. இருள் சேர, மரங்கள் கறுத்து அசைவற்றுத் தூங்கு வதுபோல் நிற்கின்றன. எங்கும் அமைதியாயிருக் கிறது. மாலை வருவதற்குமுன் ஆயர்கள் பின்னின்று குத்த, பசுத்திரள்கள் தங்கள் கன்றுகளை நினைந்து மன்றங்களில் புகுகின்றன. அன்றில் பறவைகள் பனை மடலில் அமர்ந்து, கொம்பு வாச்சியம் போல் இசை யெழுப்பித் தங்கள் பேடைகளைக் கூவி அழைக்கின் றன. பசுக்களின் கழுத்திலிட்ட மணிகள் இதனோடு இசைந்து ஒலிக்கின்றன. வரிப்பொறித்த வண்டினங் கள் ரீங்காரம் செய்ய, பகலெல்லாம் பூத்திருந்த ஆம்

பல் பூக்கள் கூம்பி நிற்கின்றன. அந்தணர்கள் வேதம் பாடி மாலையைத் தொழுகின்றனர். அவர் வேதப் பாட்டின் ஒலி தும்பிகள் ஒன்றுசேர்ந்து ரீங்காரம் பாடுவதுபோல் இருக்கிறது. பொன் தொடியும் பொன் குழையும் மின்னி ஒளிக்க ஆயர் மகளிர் விளக்கேற்றித் தங்கள் மாடங்களை அழகுபெறச் செய்கிறார்கள். கதிரவன் மறைந்தான். இருண்ட இரவும் எங்கும் பரவி நிற்கின்றது. பசும்புல் நிலங்கள் எல்லாம் பனி மூட வெண்துகில் போர்த்தால்போல் தோன்றுகிறது. இரவைக் கழித்துக் காலையில் இவ்வூரைச் சுற்றிப் பார்ப்போம்.

சேவல் கோழிகள் ஒவ்வொன்றாய் மாறி மாறிக் காலையை இயம்புகின்றன. புலிக்குரல் போன்ற ஓசை ஆயச்சேரியில் பிறக்கிறது. இது ஆயர் மகளிர், தங்கள் பெரிய மத்துகளால் தயிரைக் கடைந்து வெண்ணெய் எடுக்கும் ஓசையே. இப்புலி முழக்கமும் ஒடுங்கியது. கிழக்குச் சிவக்கச் சூரியன் தோன்றுகிறான். இடைச்சி மகளிர் மோர்ப் பானைகளை பூச்சும்மாடு இட்ட தங்கள் தலைகளில் வைத்துப் பக்கலில் இருக்கும் சிற்றூர் நோக்கிச் செல்கின்றனர். செல்லுகின்ற அவர்களின் இடை அழகையும், நடை அழகையும் பார். எங்கும் பரந்து நின்ற பனி சூரியன் ஒளிபட மறைவுற்றது. ஆனால் பனித்துளிகள் சிறு மழைத் துளிகள்போல் மரக்கிளைகளினின்று துளிக்கின்றன. கருங் காகங்கள் ஒன்றை ஒன்று கூவி அழைக்கின்றன. புளியமரக் கிளைகளினின்று வரிப்பொறிக் கொண்ட ஆண் குயில் கள் தங்கள் கறுத்த பெடைகளோடு கூடி ஓயாது கூ, கூ என்று இசைக்கின்றன. ஆயர்கள் தங்கள் ஆடு மாடுகளைப் புல்லுள்ள இடங்களுக்கு ஓட்டுகின்

றனர். ஆடும் மாடும் கூட்டங் கூட்டமாய் விரைந் தோடிச் சென்று பசும்புல்லை ஆவலுடன் இங்கும் அங்கும் அலைந்து திரிந்து மேய்கின்றன. அக்காட்சி யின் அழகைப் பார். பிச்சையெடுத்து வயிறு பிழைப் போன் கலத்திலுள்ள பல வண்ண அரிசி மணிகளைப் போல், அங்கு மேயும் பல நிற ஆடுகளும், மாடுகளும் தோன்றுகின்றன. அதோ பார்! இரண்டு காளை எருதுகள் ஒன்றை ஒன்று முட்டி விளையாடுகின்றன. வெறுயுற்ற கார்மேகம் போன்ற எருது வெறி கொண்டு, நிலத்தை உழுபவன் ஏர் கொண்டு நிலத்தை உழுவதுபோல், தன் இரு கொம்புகளால் உழுகின் றது; வெறி அடங்காது உறுமித் தன் வாலைத் தூக்கி முதுகை வளைத்து மதங்கொண்டு சுற்றிச்சுற்றி ஓடு கின்றது. இன்னொரு செக்கர் வான நிறம் கொண்ட ஏறு அதுபோலவே வெறி கொண்டு அதை நோக்கி விரைந்தோடித் தாக்க, இரண்டும் ஒன்றோடொன்று முட்டி முட்டி உறுமி உறுமிச் சண்டையிடுகின்றன. அதோ இரண்டு வெள்ளாடுகள் ஒன்றையொன்று முட்டி விளையாடுகின்றன. ஒன்றை ஒன்றுமுட்டுகின்றது, பின் நோக்கிச் சென்று திரும்பவும் ஓடிவந்து முட்டிப் பின் னங்களால் நிற்கின்றன. இவ்வாறு விளையாடி இன் புறுகின்றன. முழங்கால் படியிட்டு, சிறிதுநேரம் முட்டி முட்டிப் பாலுண்டு, தாயை நீங்கித் துள்ளி ஓடி விளையாடித், திரும்பவும் பாலுண்டு இன்பமாய்க் காலத்தைக் கழிக்கும் ஆட்டுக் குட்டியின் அழகைப் பார். சூரியன் உச்சி சேர இடையர்கள் தங்கள் கூழ்க் குடுவையினின்று கூழை இன்புற மாவடு ஊறு காயுடன் உண்ட பிறகு, ஆம்பல் பண்ணைத் தங்கள் குழல்களில் வாசிக்கின்றனர். மாலையும் கடுகி வரும்;

நாம் நேற்றுமாலை கண்ட காட்சியும் நம் கண்கள்முன் தோன்றுகிறது.

தைத் திங்களின் அறுவடையும் முடிந்தது. போரடித்துவைக்கோலைச் சுமையாகக் கட்டித் தங்கள் தலையிலிட்டு, சிலம்பொலிக்க, காதில் பூண்ட பூங் குழை ஒலிக்க, இடை அசைய, ஆயர் மகளிர் வரிசை வரிசையாகச் செல்லும் காட்சி, பொன்பூ முடி பூண்ட நீலவண்ணச் செடிகள் காற்றில் ஊசலாடிச் செல்வதுபோல் அழகுற்று விளங்குகிறது. இனி இனிதுற்ற விழாக்கொள்ள வேண்டியதுதான்.

## ஏறு தழுவல்

ஏறு தழுவுதலைக் காண இளையோரும், முதியோரும், மைந்தரும், மகளிரும் திரண்டு செல்லுகின்றனர். ஏறுகள் எல்லாம் வளைத்துக் கட்டிய தொழுவத்தில் அடைக்கப்பட்டுக் கனைத்து நிற்கின்றன. உடல் அழகும், உடை அழகும் உள்ள மகளிர்கள், சிறுவர் சிறுமிகளுடன் இக்காட்சியைக் காணப் பரண்களில் அமர்கின்றனர். மற்றொருபுறம் வலிமிக்கு முறுக்குண்ட யாக்கையுடைய ஆண் மைந்தர்கள் வரிசை வரிசையாக நிற்கின்றனர். முழவு இமிழ, முரசு இயம்ப, வளை நரல விழாத் துவங்குகிறது. மாடுகள் ஒன்றொன்றாய்த் தொழுவத்தினின்று வெளிவர, அவ்வேறுகளைப் பொருது தழுவுவர் ஆயர் மைந்தர். இவ்விழாவில் மருதநில மக்களும் கலந்து நிற்கின்றனர் சில பெண்கள் பல்வண்ணப் பூக்களைக் கொண்டையில் அழகுபெற இட்டும், சில மகளிர் பூக்களைத் தாலிநாண்களில் இட்டும், கரும்புத் துண்டுகளைப் பல்லால் சவட்டி மென்று தின்றுகொண்டே இக்காட்சியைக் காண்கின்றனர்.

சுடர் கொளுத்தப் புகை எழும்ப, ஏறுகள் ஒவ்வொன்றும் அதைச்சுற்றி வலம் வந்து அத்தொழுவத்தினின்று வெளிவரும். பிறைமுடி பூண்ட சிவபிரான் போல், வளைந்து கூர்மையான கொம்புடைய சிவப்பு எருது வெளிவந்து கம்பீரமான தோற்றத்துடன் அக்கூட்டத்தை உற்று நோக்கிக் கனைத்து நிற்பதைப் பார். இவ்விழாவின் தலைவரால் சூட்டப்பட்ட இரண்டு முழப் புதுத்துண்டு அதன் கொம்புகளில் தொங்குகின்றது. விழாத் தலைவர் இவ்வாறு ஒவ்வொரு எருதுக்கும் துண்டு கொடுப்பது வழக்கம். அது சினங்கொண்டு நிலத்தைத் தன் முன்னங் கால்களால் தோண்டி, வாலை வானம் நோக்கி உயர்த்தி, வெருண்டு விரைந்து ஓடி வருகிறது. பின் நின்ற ஆயர் மகன் ஒருவன் அதன் வாலைப்பற்றி முறுக்க அவ்வேறு அவனைத் தன் பின்னங்கால்களால் வலுத்து உதைக்க, அவன் நிலத்தில் வீழ்ந்து கிடக்கிறான். இன்னொருவன் அதன்மேல் பாய்ந்து, அதன் கழுத்தை இறுகப் பிடித்து அதன் விசையை ஒடுக்க, அவ்வேறு அவனை ஈர்த்துக்கொண்டே போகிறது. அவன் தன் பிடியையும் விடுக்காது அதனுடன் சென்று இன்னும் பலமாக அதன் கழுத்தை இறுகிப் பிடிக்க, அவ்வேறு தன் தலையை நிலம் நோக்கிச் சாய்த்துத் திடீரென்று தன் தலையைத் தூக்கி அவன் கைப்பிடியினின்றும் தப்பிஓட, இனனொருவன் அதன் மேல் பாய்ந்து அதன் கொழுத்துத் திரண்ட திமிலை (முசுப்பை)த் தன் முழு வலிகொண்டு இறுகப் பிடித்து வலியுறப் பிசைகிறான். அவ்வலியைப் பொறுக்க ஒண்ணாது அவ்வேறு தன் உடல் நடுக்குற்று நிற்கின்றது. அவன் வெற்றி பெற்றான் என்று

3049

அக்கூட்டத்தின் மக்கள் கைகொட்டிப் பேரொலி எழுப்புகின்றனர்.

இன்னொரு ஏறு விடப்பட, அது வெருண்டு அக் கூட்டத்தின் இடையே புகுந்து ஊர் நோக்கிச் செல்லுகிறது. அங்கும் இங்கும் அலைந்து திரிந்து தன் ஊர் செல்லும்.

கருத்துப் பளபளப்பான மேனியையும், நீண்டு, வளைந்து கூரிய கொம்பையும், நெற்றியில் விண் மீன் போன்ற வெள்ளைச் சுட்டியையும் உடைய கார்மேகம் போன்ற ஏறு கனைத்து இடித்துத்தலை நிமிர்த்துத் தன் இரு பெரு கண்களால் அக்கூட்டத்தை நோக்கி அசைவற்று நின்று, தன்காற் சிலம்பு ஒலிக்க வெற்றி நோக்கிச் செல்லும் வீரன் போல் வருகிறது. புலி காத்திருந்து யானையின் மேல்பாய்வது போல் பாய்ந்து, முறுக்குண்ட முழுவலியுடைய ஆயர் மகன், எருமையின் மேல் இயமன் ஏறிச் செல்லுவதுபோல் தோன்ற அவ்வேற்றின் கழுத்தைத் தன் இடக் கையால் வளைத்துக் கட்டித் தன் வலக் கையால் அதன் கொம்பைப் பிடித்து அழுத்த, அந்த ஏறுஅவன் பிடியினின்று விலகத் தன் தலையைச் சினங்கொண்டு ஆட்டியும், பிடித்த பிடியை விடானாய் நிற்கிறான். அவன் கழுத்தைச் சுற்றிப் பிடித்திருந்த இடக் கையைத் தளர்த்திக் கோபத்தால் நடுங்கும் அதன் திமிலைத் தன் வலியெல்லாம் கொண்டு பிசைய அது அவ்வலி பொறுக்காமல் தன் வாலை எழுப்பித்தன் பின் காலால் உதைத்து அவன் கைப்பிடியினின்றும் தப்பிஓட, அதை விடானாய் அவன் அதனைத் தொடர்ந்து செல்கிறான். அவன் அதன் முன் நின்று தன் இருகைகளால் அதன் கூரிய கொம்புகளைப் பிடித்து அதன் விசையை ஒடுக்கி நிற்கிறான். அந்த

எருதும் சற்று அசைவற்று நின்று திடீரென்று அவன் குடர் சிதைந்து தொங்க அவனைத் தன் கொம்பு களால் குத்தித் தூக்கி எறிகிறது. விழுந்தவன் எழுந்து குருதி தோய்ந்த தன் குடரைத் தன் வயிற்றினுள் நுழைத்து அதைப்பின் தொடரவும் மயக்கமுற்றுக் கண் இருண்டு தலை சுற்றி நிலத்தில் விழுகிறான். முன் சென்ற ஏறு திரும்பி நிலத்தில் செயலற்றுக் கிடக்கும் அவனிடம் வந்து அவனை மோந்து போர்க்களத்தில் புண்பட்டுக் கிடக்கும் பகைவனைக்கண்ட வீரன் நெஞ்சு உருகுவது போல் இரக்கங் கொண்டு அவனை வருத் தாது, பரணில் அமர்ந்திருக்கும் பெண்கள் அச்ச முற்றுக் கூக்குரல் எழுப்ப, அதனை ஒரு பாய்ச்சலால் தாவி நீர்த்துறை நோக்கிச் செல்லுகிறது.

இவ்வாறு சிலர் குடர் சிதைந்தும், சிலர் கொம்பு களால் குத்தப்பட்டுப் புண்ணுற்றும், சிலர் எலும்பு முறிந்தும் வருந்தினர். வெற்றி பெற்றவர் வீர அழகும், தோற்றமும் பெற்று நின்றனர்.

திரும்பவும் தொழுவத்தில் முழவொலியும் கொம் பொலியும் எழுகின்றன. பால் போன்ற வெண்மை யான ஏறு வெளி வர, அதன்மேல் கறுத்த மேனியன், முழுமதியை இருண்ட பாம்பு மறைப்பதுபோல் பாய் ந்து, அதன் முகப்பைத் தன் இருகைகளால் பிடித்து அதைத் துன்புறுத்தி அதன் முன்சென்று அதன் இரு கொம்புகளையும் இறுகப்பிடித்து அதன் தலையை நிலத்தில் சாய அழுத்துகிறான். அவ்வேறு கனைத்து அவன் பிடியினின்று நீங்கிப் புழுதி எழுப்பி விரைந் தோடுகிறது. அதைவிடாது அவன் அதன் பின் சென்று அதன் கழுத்தில்வீழ்ந்து தன் இருகைகளாலும் அதனை இறுக அணைத்துக் கட்டி அதனை நிறுத்த, அது

தன் இரு கொம்புகளால் நிலத்தைத் தோண்டிச் செக்கர் (சிவந்த) வானம் (மேகம்) போல் புழுதியை எழுப்புகிறது. அவன் அப்பிடியை விட்டு அதனை வலம் வந்து அதன் முன் நின்று அதன் இரு கொம்புகளையும் பிடித்து அதனைத் தன் வலியெல்லாம் கொண்டு வருத்தித் தலையை இடமும் வலமும் ஆட்ட, அதுவாயினின்று குருதி சொரியப் புலம்பி நிற்க, அதன்பால் இரக்கம் கொண்டு அதனை விடுத்துச் செல்லுகிறான். ஆடவர்களும் பெண்களும் இன்பமுற்றுப் பேரொலி எழுப்புகின்றனர்.

இவ்வாறு ஏறுகளின் கொம்புகளைப்பற்றியும் கழுத்துகளையும் திமில்களையும் வால்களையும் பற்றியும், கொம்புகளினிடையே பாய்ந்தும் ஏறு தழுவுகிறார்கள்.

மலை நாட்டு மைந்தரும் மகளிரும் தினைப்புனத்தில் எதிர்ப்பட்டு அன்பு தோன்ற களவியல் கொள்வர்; மலை அருவியின் பக்கலில் ஒருவரை ஒருவர் கண்டு காதல் பெருகிக் களவொழுக்கம் கொள்வர்; மலைச்சாரல்களின் பூச்செறிந்த பாறைகளின் பக்கலில் சந்தித்து அன்பு வாய்ப்பட்டுக் களவொழுக்கம் நடாத்துவர்.

நெய்தல் நிலத்து மைந்தரும் மகளிரும் ஞாழற் பூவும், தேன் சொரியும் புன்னைப் பூவும், தாழம் பூவும், செருந்திப் பூவும், அடப்பம் பூவும் படர்ந்து கிடக்கும் இடுமணலிடத்து ஒருவரை ஒருவர் கண்டு காதலிப்பர். அன்னம்போல் பூத்து நிற்கும் தாழைச் சோலைகளில் சந்தித்து அன்புவாய்ப்பட்டுக் களவியல் நடாத்துவர் சிலர் நறிய பூவுடைய புன்னைமரங்கள் சூழ்ந்த நீர்த்துறையில் ஒருவரை ஒருவர் எதிர்ப்பட்டு அன்புகொண்டு இன்புறுவர்.

அவ்வாறே முல்லை நிலத்து ஆயர் மைந்தரும் ஆய்ச்சி மகளிரும் கன்றும் பசுவும் மேயும் புலங்களில் கண்டு காமுறுவர்; முல்லை ஆற்றின் மணற்கரையில் கண்டு காதல் கொள்வர்; புன்செய்த் தோட்டத்தில் சந்தித்து அன்புகொள்ளுவர்.

இவ்வாறு களவியல் பல மக்களிடையே, பல அழகிய இடங்களில் தோன்றும். இதைச் செவிலியின் வாயிலாக அறிந்த பெற்றோர் அவ்விருவருக்கும் நல் மணம் நடாத்துவர்.

ஏறு தழுவும் இடத்திற்கு மகளிரும் மைந்தரும் செல்வர். தலைவியர் தங்கள் தலைவர்களின் வீரத்தைச் செவிலியரின் வாயிலாகத் தங்கள் பெற்றோர்க்குச் சொல்ல அவர்க்கு மணம் முடிப்பர். ஆயர் மைந்தர் ஏறு தழுவுதலுக்கு வருமுன் நீர்த்துறையிலும், மரா மரத்தின் குளிர்ந்த நிழலிலும், செறிந்த இலைகள் கொண்ட ஆலமரத்தின் நிழலிலும் உறையும் தெய்வங் களைத் தொழுவர்.

ஏறு தழுவுதல் முற்றுப் பெற்றதும் தலைவரும் தலைவியரும் நீர்த்துறை சென்று, ஆற்று நீரில் விளையாடி இன்புற்றுக் காலங்கழிப்பர்.

நல்ல நாளில் கடைகுழன்ற, நறுமணமும் மயிர்ச் சாந்தும் பூசிய முடியும், அரும்புண்ட காதணியும், தாமரை மலர்போன்ற தோடும், பூங்குழையும், விளங் கும் கொடிபோன்ற இடையும், துடிபோன்ற நுசுப் பும், உண்டென உணரா உயவும் இடையும் கொண்ட மகளிர்க்கு நல் மணம் நடைபெறும்.

இம்முல்லை நாட்டில் பல திங்கள் தங்கினேம். ஆயர் நமக்குத் தந்த பால் சோற்றையும், மான் இறைச்சி

கலந்த சோற்றையும் பல நாள் உண்டு இன்பமாகக் கழித்தோம்.

பாண்டிய மன்னன் தன் பகைவன்மேல் படையெடுத்துச் சென்று அம்மன்னனன் அரண்களை அழித்துக் கோட்டையைத் தகர்த்து வெற்றி பெற்று வருவான் என்றசொல் எங்கும் பரவி நிற்கிறது. பிரிவாற்றாமையால் வருந்திக் கிடக்கும் அரசியும் மனக் கலக்கம் நீங்கி அரசன் வருகையை எதிர்பார்த்திருக் கிருள். நாமும் பாசறைக்கண் சென்று அதைச் சுற்றிப்பார்த்து அரசனைத் தொடர்ந்து வருவோம்.

போர்முனைக்கு அரசனுடன், அமைச்சரும் நூலறி புலவோரும் சோதிடரும் சேனைத்தலைவரும் மறவரும், வீரரும், யானைப்படையும் குதிரைப்படையும் வேல்படையும் வில்படையும் வாள்படையும் செல்லுவது வழக்கம். இத்துடன் அரசன் பணி செய்ய மெய்காப்பாளரும், ஊமரும், மிலேச்சரும் வீரப் பெண்களும், குற்றேவல் செய்குநரும், செல்லுவது வழக்கம்.

பாசறையின் நாற் சந்தியில் பரிக்கோலன் பக்கலில் நிற்க, யானை காவல் காக்கின்றது. அவ்வியானை கரும்பையும், அதிமதுரத் தழையையும் உண்ணுது அவை கொண்டு தன் நுதலைத் துடைத்து, அவற்றைத் தன் இரு மருப்பிடை அடுக்கி நிற்கின்றது. அது பற்றிப் பரிக்கோலன் வடமொழி அசசமுறுத்தி, பயிற்றி தோட்டியால் (அங்குசத்தால்) அதைக் குத்திக் கவளத்தைத் தின்னச் செய்கிருன்.

போர் வீரர்கள், பாசறைக்கண் வதியும் கூடாரங் களைப்பார். கருங்கடலில் வெண்முடிகொண்ட பேரலைகள் உயர்ந்தோங்கி நிற்பது போல் அக்

கூடாரங்கள் காணப்படுகின்றன. அரணம் அரணமாக வேலும், வில்லும், அம்பும் நிரைத்துக், கிடுகுகளால் சுற்றி வளைத்திருக்கின்றனர்.

அரசன் இருக்கை தனித்த இடத்தில் அமைந்துளது. அது ஈரறைப் பள்ளி. அதைச் சுற்றிப் புலித்தொடர் போன்ற வலுத்த சங்கிலி இருப்பதைப் பார். அந்த இரும்பு வடத்தைச் சுற்றிப் பருத்து, நீண்ட கிடுகுகள் நிரப்பி வலுவாக வளைத்துள்ளார். அரசன் இருக்கையின் திரைகள் பல்வண்ணப் பட்டையுற்று அழகாக இருக்கின்றன. உடல்வலி நிரம்பப் பெற்ற மிலேச்சர்கள் அரசன் அரணை வலம் வந்து காக்கின்றனர். மெய்காப்பாளரும், குற்றேவல் செய்வோரும், ஊமரும் அரசனைச் சுற்றி நிற்கின்றனர். சோதிடர்களும், நூலறி புலவர்களும், அரசன் வெற்றி பெற்றுத் தன் கோயில் புகுவான் என்று நன்மொழி கூறி இன்பம் விளைவிக்கின்றனர். மாலை கடுகிவரப் பாவை விளக்கில் சுரையர் நெய் வார்த்துச் சுடர் கொளுத்துகின்றனர் ஒள்ளிய வாளைத் தங்கள் அரைக் கச்சங்களில் பொலிவு பெறச் சொருகி அரசன் பள்ளியின் விளக்குகள் அவியுந்தோறும் கொளுத்துகின்றனர் வீரமகளிர்.

அரசன், பள்ளியில் அமர்ந்து வெற்றி முரசம் காதில்பட இன்புறுகிறன். அவ்வாறு இன்புற்ற அரசன் போர்க்களத்தில் பட்டுக் கிடக்கும் மறவர்களையும், மாக்களையும் நினைந்து வருந்துகிறன். போர்க்களத்தில், அம்பு எய்யப்பெற்ற குதிரைகள் பக்கறைகள் அறுக்கப்பட்டு, புண் கூர்ந்து, செவி சாய்த்துப் புல்லுண்ணாது, வருந்தி நிற்கின்றன. யானைகள் தங்கள் துதிக்கைகள் அறுபட்டு, பெரும் பாம்புகள்போல்

நிலத்தில் கிடப்பதை நோக்கிக் கண்ணீர் விட்டு, குருதி சொரிந்து புலம்புகின்றனர்.

முழுமதி தன் வெள்ளொளியை எங்கும் பரப்பி நிற்க, அரசனும் அமைச்சரும் புண்பட்டு வருந்திக் கிடக்கும் மறவர்களைக் காணச் செல்லுகின்றனர். சேனைத் தலைவன் முன்னே சென்று வழிகாட்ட, வெண்குடைக் கீழ் அரசனும், அவன் பக்கலில் அமைச்சனும் ஒவ்வொரு கூடாரத்தில் புகுந்து, புண் பட்ட வீரர்களைக் காணுகின்றனர். அக்கூடாரங்களின் விளக்குச் சுடர்கள் காற்று வீசத் தலை சாய்த்து நிற் பன அரசனை இறைஞ்சி நிற்பனபோல் தோன்று கின்றன. அரசன் ஒவ்வொரு வீரன் பக்கலிலும் நின்று முகமலர்ச்சியுடன் அவர்க்கு ஆறுதல் கூறிப் பிரி கிறான்.

அப்போதைக்கப்போது நாழிகை இயம்புவோர் நீண்ட நாக்குக் கொண்ட மணியை அடித்துக் காலத் தைச் சொல்லுகின்றனர். அரசனும் துயில் கொள்ளு கிறான். கிழக்கு வானம் சிவக்க, பறவைகள் இசை பாடப், பொழுதும் விடிந்தது.

அரசன் வெற்றி பெற்றுத் தன் நாடு நோக்கிச் செல்லுகிறான். அணிவகுத்து, தேரின் முன்னும் பின் னும் வீரர்கள் செல்ல, வளையும் வயிரும் வெற்றி முழக்கம் எழுப்ப, காட்டைக் கடந்து கதிர்ப் புலங் களிடையே புகுந்து போகின்றனர், அரசனும் அமைச் சனும். இந்த இடி முழக்கத்தைக் கேட்ட திரிமருப்பு (முறுக்குண்ட கொம்பு) கறுப்பு மான் கூட்டங்கள் புல் உண்ணுவதை வெறுத்து அஞ்சி ஓடுகின்றன.

அரசன் பரிவாரம் செல்லும் வழியின் இரு பக்க லிலும், நீலமணி போன்ற காயாம்பூக்களும், பொன்

போன்ற கொன்றையும், மகளிர் அகங்கை (உள்ளங்கை) போல் அழகு பெற்று விரிந்து நிற்கும் கோடல் பூக்களும், குருதிபோல் செந்நிறங் கொண்ட தோன்றிப் பூக்களும் அழகாகப் பூத்து நிற்கின்றன.

அத்தோற்றம் பல வண்ணப்பட்டுடை உடுத்த மகளிர், வெற்றி பெற்றுவரும் அரசனை வரவேற்பது போல் தோன்றுகின்றது.

அரசியும் இவ்வெற்றி முழக்கம் காதில்பட, மனக்கிளர்ச்சி கொண்டு முகமலர்ச்சியுடன் கோயில் மாடத்தில் நிற்கிருள்.

வெற்றிக் கொடியை உயரத் தூக்கி, வென்றி வேழம் கோயிலின் வாயிலில் நுழைய, முழவும் முரசும் வயிரும் கொம்பும் வளையும் பேரொலி எழுப்பி ஆரவாரிக்க, அரசரும அமைச்சரும் சேனைத்தலைவரும் தங்கள் தேர்களினின்று இழிந்து, கோயிலினுள் புகுகின்றனர்.

அரசரும் அரசியும் சிங்காதனத்தில் அமர, அமைச்சரும் சேனைத் தலைவரும் தங்கள் பீடத்தில் அமர்கின்றனர். ஆடல் மகளிரும் பாடல் மகளிரும் யாழிசைத்து ஆடல் பாடல் கொள்ளுகின்றனர். வெற்றிக் கொண்டாட்டம் முடிவுபெற்றது. சேனைத் தலைவர் சொல்லிக்காட்ட, போர்முனையில் வீரம் காட்டிய வீரர்களுக்குப் பொன்னல் செய்த தாமரையை அரசன் அவரவர் கழுத்தில் முத்துமாலையுடன் இடுகிருன்.

அரசருக்கு, நாம் நல்லியக்கோடனின் நாடாகிய ஓய்ம நாட்டினின்று வந்தவர் என்று அறிவிக்க, அவர் நம்மை விருந்தோம்பி, முத்துமாலையையும்,

மாசில்லாப் பால்புகை போன்ற துகிலையும் கொடுத்து அனுப்புகிறார்.

நாம் குறிஞ்சி நாட்டைச் சுற்றிப் பார்த்து, ஓய்ம நாட்டின் கண்ணுள்ள நம் சிற்றூராகிய கருங்குழியை அடைந்து சோழ பாண்டிய நாட்டின்கண் கண்டவற்றையெல்லாம் நம் உற்றார் உறவினர்க்குச் சொல்லுவோம்.

வலிமிக்கு முறுக்குற்ற யாக்கையையுடைய மிலேச்சன் தேறல் மாந்தி, மயக்கங்கொண்டு தள்ளாடி வருகிறான். அவன் தமிழ் மகன் அல்லன் என்பது அவன் உடையினின்றே தெளிவாகிறது. தலையில் இருப்புத் தொப்பியும், மார்பில் இருப்புக் கவசமும் அணிந்துள்ளான். அவன் இரு தோள்களினின்றும் பின்புறத்தில் செக்கர் வானம் நிறங்கொண்ட துகில் காற்றில் இங்கும் அங்கும் ஊசலாட, மதங்கொண்டு பாகனுக்கு அடங்கா யானையின் வேகத்தை ஒடுக்க, தெருவில் சிதறிக் கிடக்கும் கூர்மையான கப்பணத்தையும் பொருட்படுத்தாது, அலைந்து திரிகிறான். இறுதியாக இந்த மேல்நாட்டு மகனையும் கண்டோம்.

## 4. குறிஞ்சி

**நா**ம் பல திங்களாக வண்டி ஏறியும், கால் நடையாகவும், கப்பல்களில் அமர்ந்தும் பல ஊர்களைச் சுற்றிப் பார்த்தோம். மருதம், நெய்தல், முல்லை நிலங்களில் வாழும் சிறு குடி மக்களின் வாழ்க்கையையும், மாட மாளிகைகளில் உறையும் செல்வ மக்களின் வாழ்க்கையையும், அரசர் அமைச்சர் வாழும் கோயில்களையும் கண்ணுற்றோம்; அறிவு பெற்றோம்; அங்

நாட்டு மக்கள் நம்பால் அன்பு காட்டி விருந்தோம்ப இன்பமும் பெற்றோம்.

இப்போது மலை நாட்டை நோக்கிச் செல்லுகிறோம். மலைச்சாரலில் சிறு குடி அமைத்தி இன்ப இல்லறம் நடத்தும் மலைநாட்டு மக்களிடைச் சில நாள் தங்கி, மலை ஏறி நன்னன் என்ற அரசன் கோயிலை அடைந்து அவன் பால் நாமும் பரிசு பெற்றுத் திரும்புவோம். நம் ஊர் சேருவோம்.

இது உச்சி வேளை. இளவேனில் காலம் நீங்கிய முதுவேனில் காலமாகையால் ஞாயிறு சினந்து வெப்பங் கொண்டு காய்கிறான். நாம் இடை இடையே வெப்பம் நீங்க மர நிழல்களில் தங்கிக் கதிரவன் மேற்கில் இறைஞ்சி இழிய, மலை நாட்டைச் சேருவோம். இந்த மர நிழலின் அழகைப் பார். இது இலையில்லா மரம். அதுபற்றி இதன் கிளைகளின் நிழல் வலை வேய்ந்தால் போல் கிடக்கிறது. அதோ அண்மையில் செறிந்த மரங்களின் நிழலில் கோயில்கொண்டிருக்கும் இறைவனை வணங்கிச் செல்லுவோம். வணிகர்கள் மிளகு மூட்டைகளைக் கழுதைகளில் ஏற்றி வரிசை வரிசையாகவருகின்றனர். கழுதைகளின் இரு புறத்திலும் இருக்கும் மூட்டைகள் முதிர்ந்த, பெரு முள் கொண்ட பலாப்பழங்கள் போல் தோன்றுகின்றன. இலவமரக் காய்கள் பிளவுபட்டு வெண் வரிகொண்டு விளங்குவது போல், வெண் வரி கொண்ட அணில்கள் இக் கழுதைகளைக்கண்டு, அம்மூட்டைகளினின்று தமக்கு வேண்டிய உணவுப் பொருள்கள் சிந்த அவற்றை உண்ணலாம் என்று மரங்களினின்று இறங்கி வருகின்றன. அவை கிடைக்காது ஏமாந்து மரக்கிளைகளுக்குத் திரும்பிச் சென்று, மரங்களைச் சுற்றிச் சுற்றி ஒன்றை

ஒன்று ஓடிப்பிடித்து விளையாடுகின்றன. குரங்குக் குட்டிகள் இவ்வாறே விளையாடும். நாமும் சிறுவர்களாகவிருந்த காலத்தில் இவ்வாறே ஓடிப் பிடிக்கும் விளையாட்டு ஆடினேம். அது இப்போது நினைவுக்கு வருகிறது. நாம் விளையாடி இன்புற்றதுபோல் ஐந்து அறிவு கொண்ட விலங்குகளும் விளையாடுகின்றன. நீரில் வாழும் மீன்களும் இவ்வாறே விளையாடி இன்புறும். பறவைகளும் ஒன்றை ஒன்று தொடர்ந்து பறந்து விளையாடும். நம் போன்ற வயது முதிர்ந்தவர்களும் ஆணும் ஆணுமாய், பெண்ணும் பெண்ணுமாய், நிலவுகாயுங் காலத்தில் ஆற்று மணல் கரையிலும், கடல் கரையிலும் விளையாடி இன்புறுவர். இத்தகைய விளையாட்டினின்றுதான் துணங்கைக் கூத்துத், தோன்றியது போலும்.

உப்புவாணிகர் தங்கள் வண்டிகளை வரிசையாகக் கட்டி அவற்றினுள் கொணர்ந்த உப்பைக் குவித்து விலை கூறி விற்கின்றனர். கயிறு பிணித்துக் காடிக் கலத்தைத் தலையிலிட்டுப் பக்கலில் இருக்கும் சிற்றூர்களுக்குக் கள்ளை விற்கப் போகின்றனர் சில மகளிர். இந்த ஊரில் ஓரிடத்துத்தங்கி இவ்வூரைச் சுற்றிப் பார்த்து மலைக் கோட்டையை அடைவோம்.

மலை அடிவாரத்திலுள்ள ஆரை வேய்ந்த சிறு குடிசைகள் கரிய யானைக் குழாம் போல் நமக்குத் தோன்றுகின்றன. மலையின் பல சிகரங்கள் வானம் அளாவிப் பல் வண்ணம் தோய்ந்து நிற்கின்றன. கிளிப் பச்சை, இருண்ட பச்சை, வெளிர் பச்சை, வான நீலம் மணி நீலம் இருண்ட நீலம் ஆகியவைபோர்வை போர்த்தால்போல் செடியும் கொடியும் புல்லும் தழையும் அம் மலையில் படர்ந்து அழகுபடுத்துகின்றன. இச்சிறிய

மலை நாட்டையும் அடைந்தோம். நமக்கு இடப் பக்கமாகத் தோன்றும் சிறு குடிசையின் முன்முற்றத்தின் வேங்கை மரத்தினடியில் கட்டப்பட்டிருக்கும் மான் குட்டிக்கு ஐந்து வயதுள்ள சிறுவன் அறுகம் புல்லையும் மலைத் துவரையும் கொடுத்து உண்ணச் செய்கிறான். அது அவனுடன் முட்டி முட்டி விளையாடத் தன் சிறு கைகளைக் கொட்டிக் களிக்கிறான்; அவனினும் இரண்டு ஆண்டு முதிர்ந்த அவன் தமக்கை ஓடிப்பிடித்துக் கோழிகளைக் கூட்டில் அடைக்கிறாள். அவருடைய தாய் வீட்டைச் சுற்றி வளைத்திருக்கும் வேலியின் பக்கலில் நின்று தெற்கு நோக்குகிறாள். வேட்டை நாய்கள் குரைத்தல் தன் காதில் பட, வேட்டைக்குச் சென்ற தன் தலைவன் திரும்பி வருகிறான் என்றுணர்ந்து தெற்கு நோக்கி விரைந்து செல்ல, முள்ளம் பன்றியைத் தோளில் தாங்கி வரும் கணவனைக் கண்டு இன்புறுகிறாள். முள்ளம்பன்றியின் முள்ளால் குத்துண்ட தோள்களினின்றும் உடலினின்றும் குருதி சொரிவதைக் கண்டு, அவள் இன்பம் மாறி மனக் கலக்கமுற்று, அவன் தோளினின்று அப் பன்றியைத் தூக்கி எடுத்து விரைவாக வீடு வருகிறாள். அதை ஒரு மூலையில் கிடத்திவிட்டு, தன் தலைவனின் உடலில் தோன்றி நிற்கும் குருதியைத் துடைத்துத் தரையில் அமர்ந்து, அவனைத் தன் மார்பில் அணைத்து, புண்களுக்கு நெய் பூசி மயில் தோகையால் புனைந்த விசிறியால் அவன் நோய் நீங்க விசிறிப் பாடுகிறாள்.

அவன் களைப்பு நீங்கத் தேறல் கொடுக்கிறாள். மாலையும் இருண்டு தோன்றுகிறது. நாமும் ஒரு சிறை (இடம்) தங்கிக் காலையில் துயிலுணர்ந்து மலை ஏறி நன்னனை அடைந்து அவன் பால் விருந்தயர்ந்து

திரும்புவோம். கதிரவன் சிவப்பும் பொன்னும் கலந்த திரையின் பின் தோன்றுவதற்குமுன், பறவைகள் தங்கள் கூடுகளினின்று எழுவதற்கு முன், வேடர் பருத்த கண்ணையும தாமரை இதழ்போன்று தொங்கும் காதுகளையுமுடைய குறு முயல்களைத் தூறுகளினின்று துரத்தி வலையில் பிடிப்பதற்குமுன், குளக்கரையின் குழியில் இரவெல்லாம் வீழ்ந்து கிடந்த ஆத்திப் பூப்போன்ற மருப்புடைய ஏனப் பன்றியை அக் குழியினின்று வேடர் எடுத்து வீடு செல்வதற்குமுன் நிலங்களுக்கு உரம் ஊட்ட அந் நிலங்களில் அடைக்கப் பட்டிருந்த ஆடுகளைக் கோவலர் வேறு புலம் ஓட்டுவதற்கு முன், பொன் வாய் மணிச்சிரல் மலர்கள் செறிவுற்ற காஞ்சி மரத்தின் கிளையில் அமர்ந்து, குட்டையினின்று மீன்களைப் பிடித்து விழுங்குவதற்குமுன், எழுந்து நோக்கினும் நடுங்கச் செய்யும் மலை ஏறிச் செல்லுவோம்.

இரவு அமைதியாய் இருக்கிறது. ஆனால் வண்டுகளின் ஒலியும், ஆந்தையின் கீச்சுக் கீச்சென்னும் ஒலியும் எங்கும் ஓயாது ஒலிக்கின்றன. இடை இடையே புலிகளின் முழக்கமும் காதில் படுகின்றன. மலைப்பக்கத்தின் மூங்கில் காடு எரிவதைப்பார். தீப் பற்றி எரியும் மூங்கில்களின் பிளவோசை யானைகள் பிளிறுவது போல் செவிப்படுகிறது; புகைத் தொகுதியும் தீச் சுடர்களும் வெண் மருப்பு யானைக் கூட்டம் போல் தோன்றுகின்றன. கோடை காலத்தில் முற்றிய மூங்கில்கள் உராய்வதினால் தீ எழும்பி அம்மூங்கில் புதர்களை அழிக்கின்றது. தாமே தமக்குப் பகையாய் நிற்கின்றன மூங்கில் புதர்கள். இது மனிதனே மனிதனுக்குப் பகைவனாய் இருப்பதை ஒத்திருக்கிறது.

வழி தெரியாது அலேவோம் என்ற அச்சத்தை நீக்கு; நன்னன்பால் பரிசு பெறக் கூத்தர்களும் மலே ஏறுகிருர்கள். நாமும் அவரைத் தொடர்ந்து அவர் செல்லும் வழியே செல்லுவோம். என் கை பற்றி என்னுடன் வா. பொழுதும் விடிந்தது. இப்பேரளவினதாய மலேயும் தன் அழகிய காட்சியால் நம் உள்ளத்தில் இன்பம் விளேவிக்கிறது. பாறைகள் எருமைக் கூட்டங்கள் போல் குவிந்து கிடப்பதைப்பார்; சில பாறைகள் குறுக்கும் நெடுக்குமாய்க் கிடக்கின்றன. தொலேவில் மலேயினின்று மலே ஆறு, இருண்ட மேகத் திரள்களின் இடையே தோன்றும் மின்னல் போல், விளங்குகிறது. குரங்குகள் கூட்டம் கூட்டமாய் மரக் கிளேகளில் தாவியும் பாறைகளில் இழிந்தும் கீச்சுக் கீச்சென்னும் பேரொலி எழுப்புகின்றன.

சிலர் மலே நாட்டின் விளேபொருள்களேத் தங்கள் காவடியில் மூட்டை மூட்டையாகத் தொங்கவிட்டு நம்மைப் பின் தொடர்ந்து வருகிருர்கள். அவர் காவடித் தண்டு மூங்கில் தண்டல்ல; யானேயின் நீண்ட கொம்புகளால் இணேத்த தண்டே. இக்காவடிகளேப் பல்லாண்டு தோளில் தாங்கி சுமக்க அவர் தோள்கள் 'மயிர்ச் சுவலாய்' மாறி இருக்கின்றன. இது இயற்கையின் மாறுதலேத் தெற்றன விளக்குகிறது. குளிர்ந்த நாடுகளில் இருப்பவர் உடல் வெளுத்தும், வெப்பங் கொண்ட நாடுகளில் வதியுநர் கறுத்தும் இருப்பதை நாம் அறிவோம். பாண்டிய நாட்டுத் துறைமுகங்களில் இருண்ட மேனியை உடைய அயல் நாட்டு மாலுமிகளேயும், வெளுத்த உடல் உள்ள வினிசியா, எகிப்து நாட்டு மாலுமிகளேயும் நாம் கண்ணுற்ருேம். இது நிற்க.

பாண்டிய மன்னரும், சோழ மன்னரும் பகைவர் நாடு சென்று அவர் கோட்டைகளையும், பெருமக்கள் வாழும் மாட மாளிகைகளையும், மருதநிலங்களையும், சிறு குடிகளையும், குளங்களையும் அழித்து, சிதைத்து தோல்வியடைந்த மன்னர்களின் நாட்டில்பெற்ற பொன்னையும் மணியையும் ஆடுமாடுகளையும் கவர்ந்து தங்கள் நாட்டின் செல்வத்தைப் பெருக்கினர்.

பகைவர் நாடுகளெல்லாம் தீயால் எரிக்கப்பட்டுக் கறுத்துக் காடாய்த் தோன்றின; பசுத்திரள்களும் ஏறுகளும் இன்புற்று மேய்ந்து திரிந்த நிலங்களிலெல்லாம் விலங்குகள் உலாவித் திரிந்தன; சிறிய ஊர்களெல்லாம் சிதைவுண்டு அழகு கெட்டுக் கிடந்தன; ஆசிரியர் சூழ்ந்து அறிவு வளர்த்த அவைக் களங்களிலெல்லாம் பேய்கள் அலைந்து திரிந்தன; மாளிகைகளிலுள்ள புதிர்களில் ஆந்தைகள் வாழ்ந்தன; செங்கழுநீர்ப் பூப்பூத்து அழகுபெற்று விளங்கிய பொய்கைகளில் யானையை மறைக்கும் உயரம் வாள்கோரையும் சண்பகக் கோரையும் வளர்ந்து நின்றன; நல்ல ஏறுகளால் உழுது பயிர் செய்யப்பட்ட விளைநிலங்களில் ஆண் பன்றியும் பெண் பன்றியும் உறுமி உலாவின; விழாக் காலங்களில் நறு மணம் தோய்ந்துநின்ற அகன்ற தெருக்களில் ஆண் கூகையும் பெண் கூகையும் இரட்டி ஒலித்தன; நிணம் தின்னும் பேய் மகளிர் ஆடித்திரிந்தனர்; விருந்தினர்க்கு வரையாது கொடுத்த இல்லங்களின் நெல் கூட்டினுள் கொள்ளை கொண்டு வாழும் வேடர் ஒளித்திருந்தனர்; கிளிகள் நிறைந்து இன்னிசை பாடிய திண்ணைகளில் ஆந்தைகள் ஒன்றை ஒன்று கூவி அழைத்தன.

பகை கொண்டு பொருள் ஈட்டுவதில் அளவில்லா வேட்கை கொண்டு அழகிய நாடுகளை அழித்தனர்: மக்களைத் துன்புறுத்தினர். மக்கள் துன்புற்று விலங்குகள் போல் அலைந்து திரிந்தனர். இது மக்கள் இயல்பு. இறைவன் தோற்றுவித்த மக்களைத் துன் புறுத்துவர்: அழகிய நாட்டை அழிப்பர்.

அங்குக் கண்டது மனிதனின் கொடுமை. நாம் இந்த மலை நாட்டில் காண்பது இயற்கையின் அழகு: கேட்பது இயற்கையின் இசை. இறைவன் அன்பும் அருளும் இம்மலை நாட்டின் பல வளப்பங்களில் தோன்றி நிற்கின்றன. இதுவே மலை நாடுகளின் சிறப்பு. இத்துடன் மலை நாட்டு மக்களின் வாழ்க்கையும் ஒரு தனிச்சிறப்புப் பெற்றுள்ளது.

மருத நிலத்து மைந்தர்கள் பொது மகளிர்களின் மாய வலையில் சிக்குண்டு அவர்க்கே அடிமைப்பட்டு வாழ்வர். இல்லறமே நல்லறம் என்பதை உணரார். முல்லைநாட்டு மக்கள் ஓயாது வருந்தி உழைத்து இல்லறத்தை முழு நல்லறமாக நடாத்தி வாழ்வர். நெய்தல் மக்களில் சிலர் கடல் கடந்து பொருள் ஈட்டி வாணிகம் செய்து வாழ்வர். பொருள் வேட்கை பெருகிப் பலகடல் செல்லுவர்; கடலில் வீழ்ந்து மறைவர்; அவர் மனைவியரும் மைந்தர்களும் துன் புற்றுக் காலங் கழிப்பர். மலைநாட்டு மக்களின் வாழ்க்கை இல்லறத்தின் மணி முடியாய் விளங்கி நிற்கும். அவர் தளராது ஓயாது பணி செய்து வாழ்வர். மலைநாட்டு அரசர்களிடையும், மக்களிடையும் அன் பும், கொடையும், அருளும் ஓங்கி வளர்ந்து நிற்கும். பாரி மன்னன் அத்தகைய வள்ளல் அல்லனோ? அவனுடன் கூடி வாழும் பேராசிரியராய கபிலனாரும்

அத்தகைய குணமுடையவரே. அந் நாட்டுக்குச் சென்று அவ்வரசனையும் அப் பேராசிரியரையும் காணாமல் வீடு திரும்பினோம். இது நோற்றதன் பயன் போலும். இது நிற்க.

மலைநாட்டு மக்கள் மலைச்சாரல்களில் பல பல இடங்களில் சிறு இல்லங்கள் அமைத்துக் கூடி வாழ்வர். இந் நாட்டில் வெண்சிறு கடுகும், கருணைக் கிழங்கும், யாமைக் கிழங்கும், இஞ்சியும், மஞ்சளும், அவரையும், கரும்பும், வெண்ணெல்லும், ஐவன நெல்லும், மூங்கில் நெல்லும் செழித்து விளையும். தங்களுக்குப் போதியவற்றைத் தவிர்த்து எஞ்சியவற்றைப் பிறநாடுகளுக்குக் கொண்டுபோய் விற்று அந்நாடுகளினின்று தமக்கு வேண்டிய பொருள்களைக் கொணர்வர். நன்னன் கோட்டையைச் சேரச் செவ்விதாக அமைத்த பாதை கிடையாது. சில சில இடங்களில் பெரிய பாறைகளில் ஏறிச் செல்ல வேண்டும்; சில சில இடங்களில் இட்டு வழிகள் உண்டு; சில சில இடங்களில் செவ்விதான பாதையும் உண்டு; அப்பாதைகள் செங்குத்தான மலையை நோக்கிச் செல்வது மருத நிலத்துப் பாதைகளை எடுத்து நிறுத்தி வைத்தால் போல் தோன்றும்; சில சில இடங்களில் செடிப் பிணக்குகள் அடர்ந்திருக்கும். வலமும் இடமும் சிறு குழிகளும் பெருங் குழிகளும் உள. அதுபற்றி நாம் செல்லும்போது விழிப்புடன் இரு பக்கலிலும் நோக்கிச் செல்ல வேண்டும். நாம் நோற்றதன் பயனாக நம் முன்னே கூத்தர்கள் செல்லுகின்றனர். அவர் நன்னன் பால் பரிசு பெற்றுத் திரும்புவர். அக் கூத்தர்கள் அரசனிடம் சென்று பண்டைக் காலத்து அரசர்கள் வாழ்க்கைச் சரிதையையும், வீரர்கள் வீரச் செய்திகளை

யும், தலைவன் தலைவிபால் தோன்றி மறையும் களவியலை யும், அக் களவியலில் தோன்றும் இன்ப துன்பங்களை யும் நடித்தும் பாடியும் புலப்படுத்துவர். தங்கள் ஆடல் பாடல்களுக்கு வேண்டிய வாச்சியங்களை அது பற்றியே கொண்டு போகின்றனர். தாங்கள் அவ் வாறு கொண்டு போகும் முழவு, முரசு, தடாரி, யாழ், பறை வாச்சியங்களுக்குப் போர்வை போர்த்திருக் கின்றனர். இம்மலைச் சாரலில் ஆங்காங்கு தோன்றும் மழைத்தூறல்களால் அவை நனைந்து கெடாதிருக்க வேண்டியே அவற்றிற்குப் போர்வை இட்டிருக்கின்ற னர். கூத்தர்களும் அவருடன் செல்லும் மகளிரும் நாட் டியம் செய்தும் பாடல் பாடியும் பண்டைக் காலத்துச் சரிதையைத் தோற்றுவிப்பர். அவ்வாறு கூத்தாடுங் காலத்தில் இடை இடையே முழவொலியும், முர சொலியும் யாழ் இசையும் எழுப்பி இன்புறச் செய் வார். நன்னன் கோயிலில் சில நாள் தங்கி அவனிடம் பல பரிசு பெற்றுத் தங்கள் நாடு திரும்புவர். அரசன் அவர்க்குத் துகிலும, மணியும், பொன்னும், யானைத் தந்தமும் மலை நாட்டில் விளையும் அகிலும் ஆரமும் கொடுத்து அனுப்புவன். நாம் அவன்பால் செல்லும் நோக்கம் அது அன்று. நம் நோக்கம் பல நாடுகளுக்குச் சென்று மக்கள் வாழ்க்கையை அறி வதே. நாம் அரசனிடம் சென்று நம் நாட்டு நல்லியக் கோட மன்னனின் பல சிறப்பையும் அவனுக்குக் கூறியும், அவன் நாட்டுப் பல சிறப்பையும் புகழ்ந்தும் போற்றியும், அவன் விருந்தோம்ப அங்கு சில நாள் தங்கி வீடு திரும்புவோம்.

நாம் இப்போது செல்லும் பாதையில் பெரும் பாறைகள் குறுக்கும் நெடுக்குமாய்க் கிடக்கின்றன

அவைகள் பாசி படர்ந்து வழுக்குள்ளனவாயிருக்கும். அது பற்றி விழிப்புடன் செல்லவேண்டும். நமக்கு வலப் பக்கலில் இருக்கும் மரக்கிளைகளைப் பற்றிக் கொண்டே மெல்ல மெல்ல முன் செல்லுவோம். இவ் வழுக்கு நிலத்தையும் கடந்தோம். நமக்கு, இடப் பக்கலில் இருக்கும் ஆழ்ந்த சுனையைப் பார். அது இருண்டு, ஆழ்ந்து தெள்ளிய நீர் பெற்று விளங்குகிறது ஓயாது சிறு நீர்வீழ்ச்சி வீழ்வதால் அச் சுனை நீர் குன்றாதிருக்கிறது. நீர் விழும் ஒலி மெல்லிய மணி ஒலிபோல் காதில் படுகின்றது. அச்சுனையினுள், வெள்ளிபோலும் பொன்போலும் மின்னி, சிறு கெண்டை மீன்கள் துள்ளி விளையாடுவதைப் பார். நமக்கு அணித்தாக அச்சுனையின் கரையிலுள்ள பாறைமேல் தலைவைத்துக் கிடக்கும் முதலையைப் பார். இது பாறைகளின் இடையே ஒளித்திருந்து, அந்த நீர்குடிக்க வரும் விலங்குகளைப் பிடித்துத் தின்னும். இவ்வகை முதலை இத்தகைய பெரும் பாறைகள் செறிந்த பெரிய மலைக்குட்டங்களில்தான் வாழும். இவ்வூர் மக்கள் இதனை முதலை என்று சொல்லாது, இடங்கர் என்பர். முதலைகளில் பல வகை உண்டு என்பதை நீ அறிய வேண்டியது பற்றியே நான் இதை உனக்குத் தெளிவாகச் சொன்னேன்.

அதோ நம் பாதையின் குறுக்கே கிடப்பதைப் பார். அது பருத்த மரக்கிளையல்ல. அதை உற்று நோக்கிப் பார். அதனையும் நாம் கடந்து செல்ல வேண்டியதே. அதையும் அணுகினோம். இதுதான் மலைப் பாம்பு. இது, நம்மை விடப்பாம்புகள் போல் துன்புறுத்திக் கொல்லாது. இதை நீங்கி முன் செல்லுவோம். ஒன்றை ஒன்று துரத்திச் சிறிய கண்களை

யுடைய கீரிப்பிள்ளைகள் ஓடுவதைப் பார். இவை விடப்பாம்பின் குறும்பை ஒடுக்கி அதைக் கொல்லும். சில வேளைகளில் கீரிப்பிள்ளையும் பாம்பும் ஒன்றோ டொன்று சண்டையிட்டு ஒன்றை ஒன்று கொல்லும்.

நம் முன்னே தோன்றும் வழி கொடிப்பிணக்கு கள் நிறைந்துளது. ஆனால் நம்முன் சென்ற கூத்தர் கள் அக் கொடிகளை விலக்கி அவைகளை இருபக்கலி லும் முடிந்து கட்டியுள்ளார். நம் காதில் கீச்சுக் கீச்சு என்னும் ஒலி படுகிறது. அந்த ஒலி பிறக்கும் இடம் நோக்கிச் செல்லுவோம். ஒரு சுனையில் குரங்குக் குட்டி வீழ தாய்க்குரங்கு புலம்புகிறது. இதைச் செவியுற்ற மற்றக் குரங்குகள் அந்தச் சுனையைச் சுற்றிச் சுற்றிக் கீச்சுக் கீச்சென்னும் பேரொலி எழுப்புகின்றன.

யானைகள் பிளிறும் ஒலி இடி முழக்கம்போல் எங் கும் இரட்டுகிறது. யானைகள் தங்கள் புலங்களை அழிக்காதபடி மலைநாட்டு மக்கள் அவைகளைக் கவண்கல் லெறிந்து ஓட்டுவர். சீழ்க்கை ஒலி பரப்பி நம் தலைமேல் செல்லுவன அந்தக் கவண் கற்களே. சில சமயங்களில் அக்கவண் கற்கள் நம்மைத் தாக்கும். அது பற்றி நாம் விழிப்புடன் செல்ல வேண்டும்.

வேட்டை நாய்கள் குரைத்துக் குரைத்துப் பொந்துகளில் வாழும் உடும்புகளைப் பிடிக்கின்றன. உடும்பின் இறைச்சி, முயல் இறைச்சியைப்போல் மிருது வாயிருக்காது. அது விறைத்தே யிருக்கும். மலை நிலங்களின் பயிர்களைச் சுற்றிப்பார். வானத்தில் மின்னி ஒளிரும் விண்மீன்கள்போல் பூத்து நிற்கின் றன, நெடிய தாளுடைய வெண்சிறுகடுகுச் செடிகள்.

விரைந்து செல்லும் வேற்படையைப்போல் காற்று வீசத் தலை சாய்ந்து நிற்கின்றன, ஓங்கிச் செழித்து வளரும் கரும்புத் தண்டுகள். பாறைகளி னிடையே நிற்கும் வாழை மரங்களின் நீண்ட கூர்மையான வாழை மொட்டுகள், கரிய யானை யைப் பரிக்கோலன் தோட்டியால் குத்துவதைப் போல்தோன்றுகின்றன. கருணைக் கிழங்குகள் பெண் யானையின் முழங்கால்கள் போல் எங்கும் பரவிச் சேறு கொண்டு, முற்றி வளர்ந்திருக்கின்றன. இஞ்சிக் கிழங் குகள் சிறு பாவைகள் போல் குவிந்து கிடக்கின்றன. வீட்டு முற்றங்களில் மூங்கில் நெல்லும் வெண்ணெல் லும், ஐவன நெல்லும் உலர்கின்றன, அவை உலர்ந் ததும் நில உரலில் அவற்றைப் பெய்து யானைக் கொம் பால் செய்த உலக்கைக் கொண்டு குத்துவர்.

பந்தர்களில் பரந்து வளரும் அவரைக் கொடி களினின்று நிலத்தில் வீழ்ந்து கிடக்கும் வெள் ளிய பூக்கள் தயிர்க் கட்டிகள்போல் தோன்றுவதைப் பார். முதிர்ந்து வெடித்து வீழ்ந்த அவரை விதைகள் பவள மணிகள்போல் எங்கும் சிதறிக் கிடக்கின்றன. நாம் நன்னன் கோயிலை நாளை சேர்வோம். இந்தச் சிறு குடி மக்களிடை இரவைக் கழிப்போம்.

தேன் கலந்த தினைமாவைத் தின்றுபார். அது எவ்வளவு சுவையுள்ளதா யிருக்கிறது! மூங்கில் குழா யில் வளர்த்த தயிருடன் தினைமாவைக் கலந்து உண் பர் இம்மலை நாட்டு மக்கள். மூங்கில் நெல்லை இடித்து அவலாகச் செய்து, அத்துடன் மலைத் தேனையாவது, எருமைப் பாலையாவது கலந்து உண்பர்.

பொழுதும் விடிந்தது. கின்னரப் பறவை ஓயாது ஒலிப்பதைச் செவி சாய்த்துக்கேள். மலைநாட்டு மலர்

கள் எல்லாம் பூத்து நிற்கின்றன. செவ்வரளிப் பூவை இறைச்சி என்று கருதி வரிக் கொண்ட பருந்து அதை எடுத்துச் செல்வதைப் பார்.

அதோ தொலைவில் வானம் அளாவித் தோன்று வது நன்னனின் கோயில். அதனை ஆழ்ந்த அகழி வளைத்து நிற்கிறது. இந்த அகழியில் முதலைகள் வாலால் அடித்து நீந்திக் களிப்பதைப் பார். இவ் வாறு களித்து நீந்தி வாழும் முதலைகளை இந்நாட்டு மக்கள் கராம் என்று சொல்லுவர். கோட்டையின் மதில் சுவர் பருந்து பறக்கும் உயரம் ஓங்கி நிற்பதைப் பார். நாம் உள்சென்று அரசன் கோயிலைச் சுற்றிப் பார்த்து அரசவை கூடும் காலத்தில் அரசனைப் பார்ப் போம். பேரளவாய சிற்ப வேலைகள் நிறைந்த தூண் களின் தண்டுகளையும், அத்தூண்களின் முடிவில் செதுக்கியுள்ள உருவங்களையும், தூண்களின் இடையே பாவி இருக்கும் போதிகைகளின் சிறப்பங் களையும் பார்.

கோயிலின் அடித்தளத்தைச் சுற்றி, யானைகள் ஒற்றை ஒன்று தலையாலிடிப்பது போலும், தங்கள் துதிக்கைகளைப் பிணைத்துச் சண்டையிடுவது போலும் ஒன்றை ஒன்று துரத்துவதுபோலும், நுட்பமாகச் செதுக்கி யுள்ளதைப் பார்.

சுவர்களின் போதிகைப் பட்டைகள் முல்லை தாமரைக் கொடிப்பிணைக்குகள் போல், கூருளி கொண்டு கல்லால் புனைந்திருப்பதின் அழகைப்பார். நன்னன் நாடு சிற்பவேலையில் சிறந்த நாடல்லவா? நன்னன் என்பான் பலகலைகளையும் வளர்க்கும் பேர ரசன் அல்லனோ?

விருந்தினர் தங்கும் இடம் சென்று களைப்புத் தீரு வோம், வா.

## குறமகள் குன்றம்

**வாயில்** காப்போன் கோட்டை வாயிலில் நின்று சங்கூதி அரசவை கூடுவதைத் தெரிவிக்கிறான். நாமும் தூய உடை உடுத்து அரசவை செல்லுவோம் இதுதான் விருந்ினர்க்கு அமைத்துள்ள தனி இடம். சிற்றுளிவேலைகொண்டு அழகாகப் புனைந்துள்ள இந்த இருக்கையில் நாம் இருவரும் அமர்வோம். கூத்தர்கள் குழுமி வருகின்றனர். அவர் கூத்து நடை பெறும் போலும். முழவும முரசும் இயம்புவோரும், யாழ் மகளும் தங்கள் வாச்சியங்களைப் பண்ணு முறை யில் செவ்விதாகத் திருத்துகிறார்கள். நாழிகை இயம்புவோன் சங்கூதி நாழிகையைக் கூறிக் கூத்துத் தொடங்குவதை அறிவிக்கிறான்.

"அரசன் வாழ்க! அரசி வாழ்க! அந்தணர் வாழ்க! நூலறிபுலவோர் வாழ்க! அமைச்சர் வாழ்க: குடி மக்கள் வாழ்க! சேனைத்தலைவரும் வீரர்களும் வாழ்க! வாழ்க, வாழ்க, பல்லாண்டு வாழ்க நமது அரசனும் அரசியும்!

"கந்தன் வள்ளியைக் குறமகள் குன்றத்தில் கண்டு களவியல் நடாத்தி, மணந்த கதையை ஆடியும் பாடியும், இன்னிசை யெழுப்பியும் நாடகமாக இயற்றுவோம்" என்று சொல்லி முடித்தான், கூத்தர் தலைவன்.

கூத்தரில் ஒருவன் கொம்பை வாசிக்க நாடகம் துவங்குகிறது. மைந்தரும் மகளிரும் அசைவற்று அமைதியாயிருக்கின்றனர்.

அபிநயஞ்செய்து குறமகள், குன்றத்தின் உயர்ச்சியையும் அழகையும் தெரிவிக்கிறாள். அதினின்று இழியும் மலை அருவியை அபிநயஞ் செய்து பாடும்போது, நீர் அருவியின் மணியோசைபோல் யாழும் எல்லரியும் ஒலித்து இசைக்கின்றன.

இதோ ஐந்து மகளிர் வருகின்றனர். தூய துகில் உடுத்திருப்பவள் தான் வள்ளி போலும். கொடி போன்ற அவள் இடை உயவுவதையும், கெண்டை மீன்கள் போல் அவள் கரிய கண்கள் இங்கும் அங்கும் உலாவுவதையும், மேகலை அணிந்து உயர்ந்து ஓங்கி நிற்கும் அல்குலையும், கெண்டை மீன் கழுத்துப் போன்ற அவள் கணைக்கால் அழகையும், மூங்கில் போன்ற தோள்களின் அழகையும், பொன் வரிக் கச்சங் கட்டி உயர்ந்திருக்கும் அவள் ஆகத்தின் அழகையும் பார். திணைப்புனத்தில் ஓடி ஓடி ஒருவரை ஒருவர் பிடிப்பது போல் நடிக்கிறார்கள். அவர்கள் வாய்விட்டுச்சிரிக்க, அச்சிரிப்பின் ஓசைபோல் மணியும் யாழும் இசைக்கின்றன. அச்சங்கொண்டவர் போல் அசைவற்று நிற்கின்றனர். தடாரியையும், வயிரையும் அம்மகளிர்களை நோக்கிக் குரைத்துவரும் நாய்களின் ஒலிபோல், இசைக்கின்றனர். அவ்வொலி நம் காதில், நாய்கள் சினங்கொண்டு குரைப்பது போல், ஒலிக்கிறது. என்ன இசையின் அழகு!

அதோ ஒருவன் வருகிறான். அவன்தான் கந்தன் போலும். அவன் தோளினின்று செக்கர்வான நிறம் போன்ற கலிங்கம் நிலத்தில் புரள, அழகாகக் கச்சங் கட்டிய கால்களின் கழல் ஒலிக்க, மார்பில் அணிந்திருக்கும் மணி மாலையும் பூமாலையும் விளங்க, வரி நாண் கொண்ட வில்லும் அம்பும் ஏந்தி ஆவை

நாடிச் செல்லும் ஏறு போல் நடந்து வருகிறன். அவனைக் கண்டதும் வள்ளி நிலம் நோக்கி நாணத்துடன் நிற்பதைப்பார். யாழ் வாசிக்கிருள் யாழ் மகள். இது கந்தன் நாடி நிற்கும் வள்ளியின் அன்புச் சொல்போல் இசைக்கிறது. ஒருவரை ஒருவர் நோக்குகிருர்கள். தோழி மகளிர் தொலைவில் நின்று இதைக் காணுகிறர்கள். முழவும் முரசும் இடிமுழக்கம் போல் ஒலிக்கின்றன. அவ்வொலி சினந்து, பிளிறிவரும் யானையின் முழக்கம்போல் தோன்றுகின்றது. வள்ளியும் அவள் தோழியரும் இங்கும் அங்கும் ஓடுவதைப் பார். இதனேடு இயைந்து நிற்ப யாழிசைத்துத் தடாரி ஒலித்துப் பாடுகின்றனர் பாண் மகளிர்.

இடையிலே விகடன் வில்லேந்தி ஓடி வருகிறன். முரசும் முழவும் இயக்கிப் புலிக்குரல் எழுப்புகின்றனர். இவ்விகடன் புலி வேட்டையாடுவது போல் நடிக்கிறன். மக்கள் கை கொட்டிச் சிரிக்கிருர்கள். புலியை அணுகுகிறன். அப்புலி மானய் மாற அதைக் கட்டி அணைக்க, கூட்டத்திலுள்ளோர் வாய் விட்டுச் சிரித்துப் பேரொலி பெருக்குகின்றனர்.

கந்தனும் வள்ளியும் கை கோத்துத் துணங்கைக் கூத்து ஆடுகின்றனர். அதற்கிணங்கப் பாடல் மகளிரும் ஆடல் மகளிரும் ஆடல் பாடல் கொள்ளுகின்றனர். பல வாச்சியங்களும் ஒன்று பட்டு இசைக்கின்றன. கந்தனும் வள்ளியும் ஆடிக்கொண்டே ஆற்றங்கரையை அணுக, வள்ளி கால் வழுக்கி ஆற்றில் விழுகிருள். அவள் அச்சத்தைக் கண்ட கந்தன் அவ்வாற்றில் குதித்து அவளைக் கரை சேர்க்கிறன். ஆற்றில் குதிக்கும் ஓசை போலும், நீர் பெருக்கெடுத்து இடித்

துச் செல்லும் ஓசைபோலும், வாச்சியங்கள் இசைக்கின்றன.

தோழியர் சூழ வள்ளி நிற்கிருள். அத்தோழியர் ஆடல் பாடல் கொள்ளுகின்றனர். இதை நின்று பார்க்கிருன் கந்தன். திடீரென்று அவ்விருவரையும் சுற்றிச் சுற்றி ஆடுகின்றனர் பாடுகின்றனர் அம்மகளிர். இந்த இன்பப் பாட்டிற்கும் ஆட்டத்திற்கும் தகுந்தாற்போல் வாச்சியங்கள் இசைக்கின்றன. அவ்விருவரையும் சுற்றி ஆடும் மகளிர் நெருங்க நெருங்கக், கந்தன் வள்ளியை நெருங்குகிருன். இன்னும் நெருங்கக், கந்தன் வள்ளியை ஆகமடைய முயங்க, அத்தோழியரெல்லாம் வாய்விட்டுச் சிரித்து ஓடி மறைகின்றனர்.

வாச்சியங்களும் இத்துடன் ஒன்று பட்டு ஓலிக்கக் கூட்டத்து மக்கள் கை கொட்டிப் பேரொலி எழுப்பிக் களிக்கின்றனர். கூத்தும் முடிந்தது. கூத்தர்களும் தங்கள் தங்கள் இடங்களில் அமர்கின்றனர். கூத்தர் தலைவன் அரசன் அரசியைத் தலை வணங்கி நிற்கிருன். அரசன் ஒவ்வொரு கூத்தனுக்கும் முத்துமாலை கொடுக்கிருன். அவ்வாறே வள்ளிக்கும் தோழியருக்கும் மற்றைக் கூத்தர் மகளிர்களுக்கும் முத்துமாலை கொடுக்கிருள், அரசி.

இனி நாம் விருந்துண்ண வேண்டியது தான். மாலை, நூலறி புலவோர் கூடுவார்கள். அந்தக்கூட்டத்தில் நடை பெறும் சொற்பொழிவுகளையும் கேட்போம்.

மான் இறைச்சி கலந்த சோறும், பன்றியின் கொழு நிணம் கலந்த சோறும், மலைக்கிழங்குகளின் பொரிக் கறிகளும் மிகவும் சுவையாயிருக்கின்றன.